

உண்மையான நல்ல பட்டை உணருங்கள்.
உண்மையான நல்ல பட்டு எப்
படி உணர்ச்சிக்கு இருக்கும் என்
பதை அறிய ஆடம்பரமும் மனோ
கரமுமான மைசூர் சில்க் அணிவ
தன்மூலம் தெரிந்து கொள்ள
லாம். அது சாதாரண பட்டுக்
களைவிட அதிக நாள் உழைக்கும்.
மைசூர்
சில்க்
மைசூர்
கவர்மெண்ட்
தயாரிப்பு




ASP—HC 35
பள்ளியைவிட
வெளியுலகில் அதிகம்
கற்றுக்கொள்கிறீர்கள்
எங்கள் எல்லா
ஸ்டாக்கிஸ்ட்களிடமும்
எப்பொழுதும்
விற்பனைக்குக்
கிடைக்கும்
HIND CYCLE
THE TOUGH CYCLE
FOR THE ROUGH ROAD

# கல்கி

## பம்பாய் ஆபீஸ்

கல்கி காரியாலயத்தின் பம்பாய் ஆபீஸ் மார்ச் மாதம் மாதம் கடைசி வாரத்திலிருந்து ஆரம்பமாயிருக்கிறது. பம்பாய் கல்கி காரியாலயத்தின் பிரதிநிதியாக ஸ்ரீ எச். சிவராம கிருஷ்ணன் அவர்கள் நியமிக்கப் பட்டுள்ளார்கள்.

சென்ற மாதக் கடைசி வார இதழிலிருந்து கல்கி வினியோகத்தை மேற்படி ஆபீஸ் கவனித்து வருகிறது. ஆகவே பம்பாயிலுள்ள கல்கி நேயர்கள் தங்கள் பிரதிகளை வாராவாரம் ஸ்ரீ எச். சிவராம கிருஷ்ணன், அகில-குஞ்ச், பிராமின்வாடா ரோடு, மாதுங்கா, பம்பாய்-19 (போன்: 60945) என்ற விலாஸத்தில் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள். இதுவரை பம்பாயில் கல்கி ஏஜெண்டுகளாக இருந்த சரோஜினி ஸ்டோர்ஸாரின் கல்கி ஏஜன்ஸி மார்ச் மாதம் 22 தேதியுடன் ரத்தாகி விட்டது.

# கல்கி

## பொருளடக்கம்


| மலர் 7<br>இதழ் 36 | ஏப்ரல் 4 | சர்வசித்து ஹ<br>பங்குனி 22 |
|---|---|---|






“பாட்டுக் கொரு புலவன் பாரதியடா!” என்றும், “பாடிய வாய் தேனூறும் பாரதியார் பாடல்” என்றும் பாடிய கவிமணியின் திருமுகத்தைப் பாருங்கள். அவருடைய அகத்தின் மலர்ச்சி முகத்திலும் வெளியாகிறதைக் கவனியுங்கள்.

“தமிழ்நாட்டில் நம் நாளிலும் ஒரு கவிஞர் இருக்கிறார். அவர் அருமையான கவிகளைப் பாடியிருக்கிறார்!” என்று ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் இருபது ஆண்டுகளுக்கு முன்பு கூறினார். “அப்படிப்பட்ட கவிஞர் எங்கே இருக்கிறார்?” என்று தமிழர்கள் அங்குமிங்கும் பார்த்தார்கள். கடைசியில், அவர் தமிழகத்தின் தென் மூலையில், — திருவாங்கூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த நாஞ்சில் நாட்டில் வசிப்பவர் என்று தெரிய வந்தது. கன்னியாகுமரிக்கு ஒரு காதம் இப்பால், நாகர்கோவிலுக்கு அடுத்த புத்தேரியில் இருக்கிறார் என்றும் அறிந்துகொண்டோம்.




நாகர்கோவில் கவிமணியைச் செந்தமிழ் நாட்டுக்கு அழைத்து உபசாரங்கள் செய்ய வேண்டுமென்று தமிழன்பர்கள் பல தடவை முயன்று பார்த்தார்கள். ஒரே ஒரு தடவை அவர்களுடைய முயற்சி பயன் தந்தது. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஒரே ஒரு முறை செட்டிநாட்டுக்கு விஜயம் செய்துவிட்டு உடனடியாகத் திரும்பிச் சென்று விட்டார். அதன் பிறகு அவருக்கு அனுப்பிய அழைப்புகள் எல்லாம் என்ன கதியை அடைந்தன என்பது தெரியவில்லை.

ஆடம்பரங்களையும் உபசாரங்களையும் பணமுடிப்பையுங் கூட விரும்பாத இந்த உத்தமத் தமிழ்க் கவிஞரின் இனிமை ததும்பும் தமிழ்ப் பாடல்களை “மலரும் மாலையும்” என்னும் கவிதைத் தொகுதியில் காணலாம்.

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் வாழும் நாஞ்சில் நாடு தமிழகத்தோடு ஒன்றாக இணைக்கப்படும் நன்னாளை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

# கட்டை வண்டியின் வெற்றி!



கல்கி

மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார். | இதழ் 36

# என்ன சேதி?

## அரசாங்க பாஷை

“சென்ற வருஷம் வரையில் தமிழ் நமது தாய் பாஷையாக மட்டும் இருந்தது. இந்த வருஷத்தில் அரசாங்க பாஷையாகிவிட்டது” என்று மதுரை நகரில் ஜனவரி 1உ, 2உ களில் நடைபெற்ற தமிழ்த் திருவிழாவில் “சுதேசமித்திரன்” ஆசிரியர் ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன் கூறினர். அவருடைய வாக்கை இந்த 1948-ம் வருஷத்தில் பூரணமாக நிறைவேற்றி விடுவதென்று நமது சென்னை மந்திரிமார்கள் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது. தமிழ் நாட்டில் திருச்சிராப்பள்ளி ஜில்லாவிலும் ஆந்திர தேசத்தில் கோதாவரி ஜில்லாவிலும் இனிமேல் எல்லா அரசாங்கக் காரியாலயங்களிலும் கோர்ட்டுகளிலும் தாய் பாஷையிலேயே எல்லாக் காரியங்களும் நடக்குமாம். திருச்சியில் தமிழிலும் கோதாவரியில் தெலுங்கிலும் அரசாங்கக் காரியங்கள் நடைபெறும் என்று சொல்ல வேண்டியதில்லை. இரண்டு ஜில்லாக்களில் ஏற்படும் அநுபவங்களைக் கொண்டு மற்ற ஜில்லாக்களிலும் இந்த ஏற்பாடு அமுலுக்குக் கொண்டு வரப்படும். இம்மாதிரி நமது தாய் மொழி அரசாங்க பீடங்களில் அமரப்போவதை அறிந்து யார்தான் மகிழ்ச்சி கொள்ளாதிருக்க முடியும்? நீதிபதிகள், மாஜிஸ்ட்ரேட்டுகள், வக்கீல்கள், குமாஸ்தாக்கள் முதலியவர்களுக்கு ஆரம்பத்தில் இந்த மாறுதல் கஷ்டமாக இருந்தபோதிலும் சீக்கிரத்திலேயே அவர்களும் இந்த மாறுதலைக் குறித்துக் களிப்படையும் நிலைமை ஏற்படும் என்பதில் ஐயமில்லை.

## தேசிய வாரம்

ஏப்ரல் மாதம் 6-ம் தேதி முதல் ஒரு வாரத்தை 1921-ம் ஆண்டு முதல் தேசிய வாரமாகக் கொண்டாடி வந்திருக்கிறோம். இந்தியா சுதந்திரம் அடைந்திருக்கும் நானது 1948-ம் வருஷம் தேசிய வாரத்தில், யாருடைய ஆத்ம சக்தியின் மகிமையால் நாம் சுதந்திரம் பெற்றோமோ, அந்த மகாத்மாவின் ஞாபகார்த்த நிதி வசூலில் தீவிரமாக ஈடுபட வேண்டும் என்று தலைவர்கள் கட்டளையிட்டிருக்கிறார்கள். அந்தக் கட்டளையைத் தமிழ்நாடு நன்கு நிறைவேற்றி வைக்க வேண்டும் என்று விரும்புகிறோம். மகாத்மா ஞாபகார்த்த நிதிக்குத் தமிழ் மக்கள் தங்கள் கைங்கரியத்தைப் பூரணமாக நிறைவேற்றுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

## நாராயணருக்கு நல்வரவு

1942-ம் ஆண்டு சுதந்திர இயக்கத்தின்போது பாரதத் தாயின் இரு புதல்வர்கள் வீரதீரத்தில் இணையற்று விளங்கினார்கள். அவர்களில் ஒருவரான நேதாஜி சுபாஷ் வீர சொர்க்கம் எய்திவிட்டார். இன்னொருவரான ஸ்ரீ ஜெயப் பிரகாச நாராயணர் தற்சமயம் சென்னை மாகாணத்துக்கு விஜயம் செய்திருக்கிறார். தீவிர தேச பக்தரும் தியாகியும் தீர புருஷருமான ஸ்ரீ ஜெயப் பிரகாச நாராயணருக்கு நல்வரவு கூறுகிறோம்.

சாதாரணமாக யாராவது காங்கிரஸை விட்டு வெளியேறினால் அதைப்பற்றிப் பொதுமக்கள் திருப்தியடைவதோ சந்தோஷப்படுவதோ கிடையாது. வெளியேறியவருக்கு மரியாதை செய்வதும் மாலை போட்டு உபசரிப்பதும் பாராட்டுவதும் இல்லை. காங்கிரஸை விட்டு வெளியேறியவர்களைக் குறித்துச் சாதாரணமாகக் குறை சொல்லத்தான் தோன்றும்.

ஆனால் சமீபத்தில் ஸ்ரீ ஜெயப்பிரகாச நாராயணரைத் தலைவராகக் கொண்ட சோஷலிஸ்ட் கட்சியார் காங்கிரஸிலிருந்து தாங்களாகவே வெளியேறியது பொதுவாகப் பாராட்டுதலுக்கு உரியதாயிற்று. சுதந்திர இந்தியாவின் புனர் நிர்மாணத்தில் காங்கிரஸைக் காட்டிலும் தீவிரமாக ஈடுபடச் சோஷலிஸ்டுகள்

விரும்புகிறார்கள். இதை நடத்த, காங்கிரஸுக்குள்ளே யிருந்து கலவரம் செய்து கொண்டிருப்பதைக் காட்டிலும் வெளியேறிப் பிரசாரம் செய்வதே நல்லதென்று தீர்மானித்திருக்கிறார்கள். சோஷலிஸ்டுகளின் தேச பக்தியும் காங்கிரஸ் பக்தியுமே இவ்விதம் அவர்களைக் காங்கிரஸிலிருந்து வெளியேறச் செய்தது என்று முடிவுசெய்வது மிகையாகாது.

மதுரையில் நடந்த மாகாண சோஷலிஸ்ட் மகாநாட்டில் ஸ்ரீ ஜெயப்பிரகாஷின் சொற்பொழிவு மேற்படி முடிவை ஊர்ஜிதப்படுத்தும் முறையில் அமைந்திருக்கிறது. "தேசத்தைப் பொதுப் பகைவர்களிடமிருந்து காப்பாற்ற எப்போதும் காங்கிரஸுடன் ஒத்துழைக்கத் தயாராயிருப்போம்" என்று ஸ்ரீ ஜெயப் பிரகாச நாராயணர் உறுதி கூறியிருக்கிறார். இது குறித்து மகிழ்ச்சி அடைகிறோம்.

## நைஜாம் எரிமலை

"தேசத்தின் பொதுப் பகைவர்" என்று சொல்லும்போது தற்சமயம் நைஜாம் இராஜ்யத்தில் நடந்து வரும் அட்டூழியங்களைப் பற்றிய ஞாபகம் வருகிறது. சுதந்திர இந்தியாவின் நாலு மாகாணங்களை நைஜாம் ராஜ்யத்தின் எல்லை தொட்டுக் கொண்டிருக்கிறது. எல்லைப்புறம் நெடுகிலும் தகராறுகள் நடந்து கொண்டிருக்கின்றன. நைஜாம் ராஜ்யத்துக்குள்ளே நடக்கும் அட்டூழியங்களைப் பற்றிப் பத்திரிகைகளில் வரும் விவரங்கள் ஈர வாழ மட்டையும் பற்றி எரியச் செய்யும்படி இருக்கின்றன. காஸிம் ரஸ்வி என்பவரைச் சர்வாதிகாரத் தலைவராகக் கொண்ட ரஸாக்கியர் என்னும் கூட்டத்தார் போர்க்கோலம் பூண்டு நாடெங்கும் சுற்றிச் செய்து வரும் அக்கிரமங்களைக் கடவுளாலேயே பொறுக்க முடியாது. அப்படியிருக்க, புது டில்லியிலுள்ள நமது ஜவாஹர்லால் — படேல் சர்க்கார் எத்தனை காலம் பொறுத்துக் கொண்டிருக்க முடியும்? நைஜாமில் புகைந்து கொண்டிருக்கும் எரிமலை படீரென்று ஒரு நாள் வெடித்து விடலாம். அப்போது ஜே. பி. அவர்களைத் தலைவராகக் கொண்ட சோஷலிஸ்ட் வீரர்கள் போர் முனையின் முன்னணியிலே நிற்பார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

## அரசர் யார்?




"இன்று ஹைதராபாத்தில் ரொம்ப சக்தி வாய்ந்தவர் யார் என்று கேட்டால், அவர் நைஜாம் அல்ல, காஸிம் ரஸ்விதான்!" என்று பிரபல பிரிட்டிஷ் பத்திராதிபரான கிங்ஸ்லி மார்ட்டின் கூறுகிறார்.

# மானம் பிழைத்தது

சென்னை மாகாணத்தின் மானத்தைப் பாதுகாத்த சென்னைச் சட்டசபை அங்கத்தினர் 112 பேரையும் பாராட்டுகிறோம். அவர்கள் தமிழ்நாடு, ஆந்திரம், கேரளம், கன்னடம் ஆகிய தென்னாடுகளின் கௌரவத்தையும், அந்தந்த நாடுகளில் வாழும் மக்களின் கௌரவத்தையும் காப்பாற்றினார்கள். வடநாட்டாரும் உலகத்தாரும் நம்மைப் பார்த்து ஏளனம் செய்து சிரிப்பதற்கு இடமில்லாதபடி கருணை செய்து காப்பாற்றினார்கள்.

சென்ற நாலு வருஷ காலமாகச் சென்னை மாகாணத்தின் பெயர் அவ்வளவு சிறந்து விளங்குகிறதென்று சொல்ல முடியாது. பல காரணங்களும் பல காரியங்களும், "வேண்டாம்" "வேண்டும்" இயக்கங்களும், அரசியல் 'கிளிக்'குகளும் கோஷ்டிகளும் அர்த்தமற்ற கிளர்ச்சிகளுமாகச் சேர்ந்து சென்னையின் கௌரவத்தை எவ்வளவு குலைக்கலாமோ அவ்வளவு குலைத்து வந்திருக்கின்றன.

ஏதோ சென்ற ஒரு வருஷ காலமாக மீண்டும் சென்னையின் கௌரவம் ஓரளவு உயர்ந்து வந்துகொண்டிருந்த சமயத்தில் மறுபடியும் அதற்கு ஆபத்து வந்து சேர்ந்தது.

மார்ச்சுமீ 26உ சென்னைச் சட்டசபையிலுள்ள காங்கிரஸ் கட்சியின் தலைமைப் பதவிக்கு வருஷாந்தரத் தேர்தல் நடக்கும் என்று தெரிந்தது. இந்தத் தலைமைக்கு யார் வருகிறார் என்பதை முன்னிட்டே மந்திரி சபை அமையுமாதலால் மேற்படி தேர்தல் விசேஷ முக்கியத்தை அடைந்தது.

கட்சித் தலைமையிலும் பிரதம மந்திரி பதவியிலும் மாறுதல் ஏற்படும் என்ற பிரஸ்தாபம் ஏற்பட்டது. சுமார் இரண்டு மாத காலமாக மாகாணமெங்கும் அரசியல் உணர்ச்சி உள்ளவர்களிடையே இதே பேச்சாயிருந்தது. கோஷ்டிகளும் 'கிளிக்'குகளும் சுறுசுறுப்பையடைந்தன.

ஓமந்தூர் ராமசாமி ரெட்டியாருடன் யார் யார் போட்டியிடப் போகிறார்கள் என்பதைப் பற்றிப் பல அரசியல் ஜோசியங்கள் வெளியிடப்பட்டன.

யார் போட்டியிட்டாலும் ஓமந்தூர் ரெட்டியாரின் தோல்வி நிச்சயம் என்று சில அணுகுண்டு ஜோசியர்கள் அபிப்பிராயப் பட்டார்கள்.

ஓமந்தூர் ரெட்டியார் தேர்தலுக்கு நிற்கவே மாட்டார், சமயம் வந்ததும் பின்வாங்கி ஓட்டம் பிடிப்பார் என்றும் சில தீர்க்கதரிசிகள் அறிவித்தார்கள்.

ஆனால் கட்சித் தலைமையிலும் பிரதம மந்திரி பதவியிலும் எதற்காக இப்போது மாறுதல் வேண்டும் என்று கேட்டால், யாரும் இதற்குத் தக்க பதில் சொல்லவில்லை.

ஓமந்தூர் ரெட்டியார் பேரில் குற்றங்கள் என்னவென்று கேட்டால் பதில் சொல்லுவதற்கு மென்று விழுங்கினார்கள். சில விசித்திரமான காரணங்களைத் தயங்கித் தடுமாறிக் கொண்டே சொன்னார்கள்.

"சட்டசபை அங்கத்தினர்களுக்கு ரெட்டியார் பேட்டி கொடுப்பதில்லை" என்றார்கள்.

"இங்கிலீஷ் தெரியாது; 'பிரைவேட் டியூஷன்' வைத்துக் கற்றுக்கொள்வதுமில்லை" என்றார்கள்.

"சட்ட சபைக்கு வருவதில்லை; வந்தாலும் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்வதில்லை" என்றார்கள்.

"ரெட்டியார் வாரத்தில் ஒரு நாள் மௌன விரதமும் உண்ணாவிரதமும் இருக்கிறார்; இந்த அநியாயத்தைப் பொறுக்க முடியாது" என்றார்கள்.

"ஹைகோர்ட் ஜட்ஜு நியமனங்களில் தலையிட்டார்; இந்தக் கொடுமையைச் சகிக்க முடியாது" என்றார்கள்.

"ரெட்டியாருக்கு மோட்டார் விடத் தெரியாது; சீட்டு ஆடத் தெரியாது; கிளப்புக்குப் போவதில்லை; சரசமாகப் பேசுவதில்லை; அடிக்கடி 'ஆகையினாலே' என்கிறார்; ஓயாமல் அவருக்குப் பல் வலி வருகிறது" என்றெல்லாம் அடுக்கிக்கொண்டே போனார்கள்.

எல்லாப் புகார்களையும் கேட்டுவிட்டு அவற்றின் சாராம்சம் என்னவென்று பார்த்தால், "ரெட்டியார் யோக்கியராயிருக்கிறார்; எம். எல். ஏ.க்களின் சிபார்சுகளுக்குச் செவி கொடுப்பதில்லை; மற்றவர்கள் காட்டிய இடத்தில் கை-

யெழுத்துப் போடுவதில்லை; எந்த விஷயத்தையும் தாமே தீர யோசித்து முடிவு செய்கிறார்; காரியத்தில் மிகவும் கண்டிப்பா யிருக்கிறார்'' என்பவைதான் அவர் பேரில் சுமத்தப்படும் குற்றங்கள் என்று ஏற்பட்டது.

* * *

மார்ச்சுபீ 26-ம் தேதி நெருங்க நெருங்க அரசியல் வட்டாரங்களில் சுரம் கடுமையாகி வந்தது. உஷ்ணநிலை 98 டிக்ரியி லிருந்து 108க்குப் போய்விட்டது. சரி சரி; ஓமந்தூர் மந்திரி சபை 'ஹோ கயா' தான் என்று சொல்லி விட்டார்கள்.

ஓமந்தூர் ரெட்டியார் இத்தனை வோட்டுக்களால் தோற்கடிக்கப்படுவார் என்று ஜோஸ்யங்கள் வெளியாயின. புதிய மந்திரி சபையில் எந்தெந்தப் புது மந்திரிகள் இருப்பார்கள் என்றும் அவர்களுக்குப் பார்லிமெண்டரி செக்ரடரிகளாக யார் யார் இருப்பார்கள் என்றும் வெள்ளைக் காகிதத்தில் அச்சடித்து விட்டார்கள்.

யாரைச் சிபார்சு பிடித்துக்கொண்டு புதிய மந்திரிகளிடம் போவது, எந்தெந்த விஷயங்களுக்கு யார் யாரிடம் போவது என்றெல்லாம் கூடச் சிலர் முன்யோசனை செய்து வைத்துக் கொண்டார்கள். பூமாலைகளுக்கும் 'ஆர்டர்' கொடுத்துவிட்டார்கள்.

கடைசியாக, ராஜாஜி மண்டபத்தில் மார்ச்சுபீ 26-ம் தேதி மாலை கூடிய காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில், மாறுதல் வேண்டிய கட்சி பெருந் தோல்வியடைந்தது. மாறுதல் வேண்டாதவர்கள் வெற்றி பெற்றார்கள். பழைய கட்சித் தலைவரும் பழைய பிரதமரும் பதவிகளில் ஊர்ஜிதமானார்கள்.

சென்னை மாகாணத்தின் மானம் ஒருவாறு தப்பிப் பிழைத்தது!

* * *

ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் மறுபடியும் இம் மாகாணத்தின் பிரதமரானது குறித்து நாம் பரிபூரண மகிழ்ச்சி யடைகிறோம்.

அவ்விதம் மகிழ்ச்சி யடைவதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன.

ஓமந்தூர் ரெட்டியார் காந்தியடிகளின் தலைசிறந்த சீடர்களில் ஒருவர். திரிகரண சுத்தியாகத் தமது சொந்த வாழ்க்கையில் காந்தி மகானுடைய போதனைகளைக் கடைப்பிடித்து நடந்து வருகிறவர்; சீலத்திலும் ஒழுக்கத்திலும் குறை காண முடியாதவர்.

ஆகையினால் அவர் சென்னைப் பிரதமரானது குறித்து நாம் மகிழ்கிறோம்.

நாட்டின் நலத்துக்காகக் காங்கிரஸ் மகாசபை போட்ட திட்டங்களைத் தீவிரமாக நடத்திவைக்க ஓமந்தூர் ரெட்டியார் அல்லும் பகலும் பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்.

ஆகையினாலே அவர் சென்னை மாகாணத்தின் பிரதமரா யிருப்பதை நாம் மகிழ்ச்சியுடன் ஆதரிக்கிறோம்.

காந்தியடிகளுக்கு மிகவும் உகந்த பூரண மதுவிலக்கு, ஹரிஜன முன்னேற்றம், ஆதாரக் கல்வி, கிராமப் புனருத்தாரணம் ஆகிய நிர்மாணத் திட்டங்களில் ரெட்டியார் பரிபூரண நம்பிக்கை கொண்டவர். அத்திட்டங்களை நடத்தி வைப்பதில் விசேஷ ஊக்கம் கொண்டவர்.

ஆகையினால் ஓமந்தூர் ரெட்டியார் பிரதமரா யிருப்பது பற்றி நாம் மகிழ்ச்சி கொள்கிறோம்.

ஒரு வருஷத்துக்கு முன்னால் யாரும் எதிர்பாராத அளவில் ஓமந்தூர் ரெட்டியார் அரசாங்க நிர்வாகம் பற்றிய சகல விஷயங்களையும் தெரிந்து கொண்டிருக்கிறார். சென்னை சர்க்கார் நிர்வாகத்தின் ஒவ்வொரு பகுதியும் ஓமந்தூர் ரெட்டியாரின் சிரத்தை காரணமாக முன்னைக் காட்டிலும் இப்போது திறமையாகவும் சுறுசுறுப்பாகவும் வேலை செய்து வருகிறது.

ஆகையினாலே ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் பிரதமரா யிருப்பதை நாம் பூரணமாக ஆதரிக்கிறோம்.

சர்க்கார் இலாகாக்களில் லஞ்சத்தையும் மற்ற ஊழல்களையும் போக்குவதற்கு ஓமந்தூர் ரெட்டியார் அபார முயற்சி எடுத்திருக்கிறார். 'சிவப்பு நாடா முறை' என்று சொல்லப்படும் சர்க்கார் இலாகாக்களின் காலம் கடத்தும் வழக்கத்தை மாற்றுவதற்கு அரும்பாடுபட்டு வருகிறார்.

ஆகையினால் பிரதமர் கனம் ஓமந்தூர் ரெட்டியாரை நாம் பாராட்டி வாழ்த்துகிறோம்.

ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் கிராமத்தில் பிறந்துவளர்ந்து கிராம வாழ்க்கையையே மனப்பூர்வமாக விரும்பும் கிராமவாசி. இந்தியா தேசத்து மக்களில் 100-க்கு 90 பேர் கிராமவாசிகள். அவர்களுடைய சுக துக்கங்களையும் குண நலன்களையும் தேவைகளையும் நன்கு அறிந்தவர். கிராமவாசிகளின் நன்மைக்காக இடைவிடாமல் அவர் பாடுபட்டுக் கொண்டு வருகிறார்.

ஆகையினாலே ஓமந்தூர் ரெட்டியாரின் மாகாணத் தலைமையை நாம் பெரிதும் வரவேற்கிறோம்.

ஓமந்தூர் ரெட்டியார் உண்மையான பக்தியுள்ள ஆஸ்திகர்; ஹிந்து தர்மத்தைக் காப்பாற்றுவதில் தீவிரமான சிரத்தை உள்ளவர்; சாதி வேற்றுமை உணர்ச்சி சிறிதும் இல்லாதவர்; சாதித் துவேஷமும் பாஷைப் பகைமையும் அறவே இல்லாதவர்.

ஆகையினால் ஓமந்தூர் ரெட்டியார் தற்சமயம் நமது பிரதம மந்திரியாயிருப்பது சென்னை மாகாணத்தின் அதிர்ஷ்டம் என்று நாம் நம்புகிறோம்.

• • •

சினம் ஓமந்தூர் ரெட்டியார் அவர்களிடம் குறைகளே இல்லை யென்று நாம் சொல்லவில்லை. மனிதராய்ப் பிறந்த யாரிடந்தான் குறைகள் இல்லை?

ஓமந்தூர் ரெட்டியாரின் சுபாவத்திலும் பேச்சிலும் இனிமை கிடையாது; கடுகடுப்பு அதிகம் உண்டு. சகிப்புத்தன்மை கிடையாது; கோபமும் கண்டிப்பும் உண்டு.

அவருடைய சம்பாஷணையில் சாதுரியம் கிடையாது; அவருடைய சொற்பொழிவுகளில் சிங்காரிப்புக் கிடையாது; மனதில் தோன்றியதைத் தோன்றியபடி அப்பட்டமாகப் பேசுவார்.

இவற்றை யெல்லாம் நாம் பொறுத்துக் கொள்ளவும் சகித்துக் கொள்ளவும் தயாரா யிருக்கிறோம்.

வாழ்க்கையின் ஆரம்பத்தில் காந்தி மகான் பெரிய சொற்பொழிவாளராகக் கிளம்பவில்லை. ராஜாஜி அரசியல் வாழ்வை மேற்கொண்ட காலத்தில் பொதுக் கூட்டங்களில் ஐந்து நிமிஷத்துக்குமேல் அவரால் பேச முடியாது.

இதனாலெல்லாம் அவர்களுடைய மேன்மை குன்றிவிட்டதா? உலகத்துக்கும் நாட்டுக்கும் அவர்கள் செய்த சேவை பழுது பட்டுவிட்டதா?

ஆகையினாலே ஓமந்தூர் ரெட்டியாரிடம் உள்ள சிறு குறைகளை நாம் பொருட்படுத்தவில்லை. அவரிடம் பெரும்பாலாக உள்ள நல்ல அம்சங்களைப் பாராட்டி அவர் மீண்டும் இம் மாகாணத்தின் பிரதமரானது பற்றி மகிழ்ச்சி அடைகிறோம்.

முன்னைக் காட்டிலும் மும்மடங்கு உற்சாகத்துடன் சென்னை மாகாணம் எல்லா வகையிலும் மேம்படுவதற்குரிய முயற்சிகளில் பிரதமர் ரெட்டியார் ஈடுபடுவார் என்று நம்புகிறோம்.

---

# ஏ. வைத்தியநாதய்யரின் சேவை

---

மாகாணப் பிரதமர் உத்தியோகத்துக்காக நடந்த ஓமந்தூர் - பிரகாசம் போட்டியில் மதுரை ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் தலையிட்ட முறையும் செய்த காரியங்களும் நமக்குப் பெருந் துயரை உண்டாக்கின.

முக்கியமாக, ஸ்ரீ பிரகாசம்காருவை ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் ஆதரித்தது பெரும் பிசகு என்று கருதி, அதற்காக மிகவும் வருத்தப்படுகிறோம்.

ஒரு வருஷத்துக்கு முன்னால் "ஸ்ரீ பிரகாசத்தின் ஊழல் நிறைந்த நிர்வாகம் நீடிப்பதனால் இந்த மாகாணம் குட்டிச் சுவராகும்" என்று சட்ட சபை அங்கத்தினரில் பெரும்பாலோர் தீர்மானித்தார்கள். எனவே, ஸ்ரீ பிரகாசத்தைத் தலைமைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு ஓமந்தூர் ரெட்டியாரைத் தேர்ந்தெடுத்தார்கள். இந்த மாறுதலுக்கு முக்கிய காரண புருஷரா யிருந்தவர்களில் ஸ்ரீ வைத்தியநாதய்யரும் ஒருவர்.

இந்த ஒரு வருஷத்தில் ஸ்ரீ பிரகாசத்தையே மறுபடியும் ஆதரிக்கும்படியான காரணம் என்ன நேர்ந்து விட்டது?

பத்திரிகைகளுக்கு ஸ்ரீ வைத்தியநாதய்யர் அனுப்பி யிருக்கும் அறிக்கையில் மேற்படி கேள்விக்குப் பதில் கிடையாது.

"டாக்டர் சுப்பராயன் அழைத்தார்; அதனாலேதான் வந்தேன்" என்று ஸ்ரீ வைத்தியநாதய்யர் கூறி யிருக்கிறார்.

அப்படியென்றால், டாக்டர் சுப்பராயன் "நான் போட்டியிட வில்லை" என்று கையை விரித்தவுடன் ஸ்ரீ வைத்தியநாதய்யரும் முயற்சியை விட்டுத் தொலைத்திருக்க வேண்டியதுதானே? ஸ்ரீ பிரகாசத்தைப் பிரதமராக்க ஏன் முயன்றிருக்க வேண்டும்?

ஓமந்தூர் ரெட்டியாரின் தலைமை தேசத்துக்குத் தீங்கானது என்பதில் அவ்வளவு தீவிரமான நம்பிக்கை ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யருக்கு இருக்கும் பட்சத்தில் ஓமந்தூருக்குப் போட்டியாகத் தாமே நின்றிருக்கலாம்; அல்லது இன்னொரு தக்க அபேட்சகரைப் பொறுக்கி நிறுத்தியிருக்கலாம். ஸ்ரீ பிரகாசத்தை ஆதரிக்க முற்பட்டது மிகத் தவறான காரியம்.

ஸ்ரீ வைத்தியநாதய்யர் பதினைந்து அல்லது இருபது வோட்டுக்கள் பெற்றுத் தோல்வியடைந்திருந்தாலும் அவருக்கு அது பெருமையாக இருந்திருக்கும்; கொள்கைக்காகவும் இலட்சியத்துக்காகவும் அவர் போட்டியிட்டதாக ஏற்பட்டிருக்கும்.

முதல் முதலிலே நடந்த சென்னைச் சட்ட சபை காங்கிரஸ் கட்சியின் கூட்டத்தில் ராஜாஜிக்கு 33 வோட்டுத்தான் கிடைத்தது. ஆயினும் அதனால் ராஜாஜியின் கௌரவத்துக்குப் பங்கம் எதுவும் ஏற்படவில்லை. ராஜாஜி கோஷ்டியாரின் கௌரவம் அதனால் உயர்ந்தது.

அவ்விதமே இப்போதும் ஸ்ரீ வைத்தியநாதய்யர் நடந்து கொண்டிருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்குமல்லவா?

பிரதமர் பதவி சம்பந்தமாக ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் செய்த முயற்சியின் காரணமாய் ஒரு நல்ல பலன் ஏற்பட்டது குறித்து மகிழ்ச்சியடைகிறோம்.



"ராஜாஜி கோஷ்டி" என்று அர்த்தமில்லாமலும் காரணமில்லாமலும் ஒரு கோஷ்டி இருந்து கொண்டிருந்தது.

இந்த கோஷ்டியார் செய்யும் காரியங்களுக்கெல்லாம் பாவம், எங்கேயோ வெகு தூரத்தில் உள்ள ராஜாஜியின் பேரில் பழி விழுந்து கொண்டிருந்தது.

அந்த கோஷ்டி கலைக்கப்பட்டது மிகவும் பொருத்தமான காரியம்.

சென்னை மாகாணத்தின் தலைவராகவும் பிரதமராகவும் ராஜாஜி தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்ற நோக்கங் கொண்டிருந்த சட்டசபை அங்கத்தினர் "ராஜாஜி கோஷ்டி" என்று பெயர் பெற்றார்கள்.

எப்போது அந்த நோக்கம் இல்லாமற் போயிற்றோ, அப்போது ராஜாஜி கோஷ்டி என்பதாக ஒரு கோஷ்டிக்கு அர்த்தமும் அவசியமும் இல்லாமற் போயின.

ஓமந்தூர்—பிரகாசம் காரு போட்டியில் ஏற்பட்ட அபிப்பிராயபேதம் காரணமாக "ராஜாஜி கோஷ்டி" கலைக்கப்பட்டது மிகவும் உத்தமமான காரியம்.

ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் அவர்கள் சிறந்த தேச பக்தர்; தியாகி; கொடையாளி; தாய்நாட்டுக்காக எவ்வளவோ அரும்பெரும் சேவைகள் செய்திருக்கிறார்.

ஆயினும் அவருடைய அவசரமும் படபடப்பும் அரசியல் வாழ்க்கையில் அவர் வெற்றி பெறுவதை அசாத்தியமாக்கி விடுகின்றன. அவருடைய நல்ல நோக்கங்கள் நிறைவேறுவதற்கு அவருடைய காரியங்களே தடையாக ஏற்பட்டுவிடுகின்றன.

சட்டசபைத் தேர்தலுக்கு ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் நிற்கவே விரும்பவில்லை; பலரும் வற்புறுத்தியதின் பேரில் நின்றார்.

சட்டசபை அங்கத்தினரான பிறகு பல தடவை "ராஜீநாமா செய்து விடுகிறேன்" என்று பயமுறுத்தினார். அப்போதெல்லாம் அவர் ராஜீநாமா செய்துவிடக் கூடாதே என்று நாம் பெரிதும் கவலைப்பட்டோம்.

ஆனால் இந்தத் தலைமைப் பதவித் தேர்தலில் அவருடைய காரியங்களைப் பார்த்த பிறகு ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் மாகாண சட்டசபை அங்கத்தினர் பதவியை ராஜீநாமாச் செய்து விடுவதே அவர் இந்த நாட்டுக்கும் சென்னை மாகாணத்துக்கும் தமக்குமே செய்து கொள்ளக் கூடிய சிறந்த சேவையாகும் என்று கருதுகிறோம்.



# நீடித்த இருமல்

## மிகவும் அபாயகரமானது

இருமலினால் உங்கள் ஸ்வாசாசயம் பலவீனமடையும். கிருமி நாசன, ஸ்வாச மாத்திரையான பெப்ஸ் சாப்பிடுவதால், அபாயம் தவிர்க்கப்படும். பெப்ஸ் வாயினுள் கரையும்போது, வெளியாகும் உன்னத மருந்து சத்துக்கள் ஸ்வாசத்தினால் ஸ்வாசாசயத்திற்குக் கொண்டு போகப்படுவதால், இருமலை நிறுத்தி, வெந்து வாடி வீங்கிய மெல்லிய தோல்களுக்கு ஹிதமளித்து, மார்ச்சளியை அகற்றி, மற்ற தொத்து நோய்களின் வியாபகத்தையும் தடுக்கிறது. குளிர் ஜுரம், முறை ஜுரம், தொண்டைப் புண், இருமல் ஜலதோஷம், மார்ச்சளி முதலிய மார்பு-சுவாசய சம்பந்தப்பட்ட வியாதிகள் 'பெப்ஸி'னால் அறவே அகற்றப்படுகின்றன.



# PEPS

## பெப்ஸ்

கிருமி நாசன ஸ்வாச மாத்திரைகள் சாப்பிடுங்கள்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்

ஏஜண்டுகள்:— மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி. மதராஸ்

No. 1

## உஷ்ணத்தினால் ஏற்படும் புண்கள்

### சுட்டப் புண்கள், இவைகள்

### ஶீக்ரமாய் அபாயமின்றி சொஸ்தமாகின்றன



உஷ்ணத்தினால் ஏற்படும் புண்ணையோ அல்லது சுட்டப் புண்ணையோ ஒரு மெல்லிய துணியில் கனமாக ஜாம்பெக்கைத் தடவி மூடுங்கள். ஜாம்பெக்கிலுள்ள அதி சிறந்த மூலிகைத் தைலம் ரணத்தை ஆற்றி வலியையும் நீக்கும். சருமம் பிளந்திருந்தாலும் ஜாம்பெக் தோலை வளரவைத்து புண்ணையும் குணப்படுத்தும்.

சகல சரும நோய்களுக்கும் ரணங்களுக்கும் ஜாம்பெக் ஓர் இணையில்லா சஞ்சீவி.



# Zam-Buk

உலகப் பிரசித்திப் பெற்ற மூலிகைக் களிம்பு

மிருகக் கொழுப்பின்மைக்கு உத்தரவாதம்

ஏஜண்டுகள்:— மெஸர்ஸ் தாதா & கோ., பி. டி. மதராஸ்

No. 6

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்கி

## 19. வழக்கின் முடிவு

தாதா அப்துல்லா கம்பெனியாரின் வழக்கு சாமான்யமானதல்ல. நாற்பதினாயிரம் பவுன் வர வேண்டுமென்று வழக்குத் தொடரப்பட்டிருந்தது. தாதாவுக்கு ஆதாரம் புரோ நோட்டுகளும் புரோ நோட்டுத் தருவதாக வாக்குறுதிகளுந்தான். 'புரோ நோட்டுகள் யோசனை செய்வதற்கு அவகாசம் கொடாமல் மோசடியாக எழுதி வாங்கப்பட்டவை' என்பது பிரதிவாதியின் கட்சி. வழக்கில் சிக்கல்களும் சட்ட நுட்பங்களும் ஏராளமாயிருந்தன. இரு தரப்பிலும் பெரிய பெரிய பாரிஸ்டர்களையும் அட்டர்னிகளையும் அமர்த்தியிருந்தார்கள்.

வாதியின் கட்சிக்கு ஆதாரங்களையும் நிகழ்ச்சி விவரங்களையும் சேர்த்துத் தொகுக்கும் வேலை காந்திஜிக்கு அளிக்கப்பட்டது. எனவே வக்கீல் தொழில் நடத்தும் முறை பற்றிய மிக உபயோகமான அனுபவங்கள் காந்திஜிக்குக் கிடைத்தன.

எடுத்துக் கொண்ட வேலையை மிகவும் சிரத்தையுடன் காந்திஜி செய்தார். வழக்கின் விவரங்களில் அமிழ்ந்து விட்டார் என்றே சொல்லலாம். இரு கட்சியாரின் தஸ்தாவேஜிகளையும் அவர் படிக்கும்படி ஏற்பட்டது. எனவே வாதிப் பிரதிவாதிகளுக்குக்கூட தெரியாத அளவில் காந்திஜி மேற்படி வழக்கைப் பற்றிய எல்லா விவரங்களையும் தெரிந்து கொண்டார்.

விவரங்கள் என்றால் உண்மை நிகழ்ச்சிகளேயல்லவா? இவ் வழக்கில் உண்மை நிகழ்ச்சிகள் தாதா அப்துல்லாவுக்கே சாதகமாயிருந்தன. எனவே சட்டமும் அவருக்கு அநுகூலமாக இருந்தாக வேண்டும் என்று காந்திஜிக்கு உறுதி ஏற்பட்டது.

அதே சமயத்தில் அந்த வழக்கு இலேசில் முடியக் கூடியதல்லவென்றும் நெடுங்காலம் இழுத்துக் கொண்டே போகக்கூடும் என்றும் காந்திஜிக்குத் தெரிய வந்தது. விவகாரம் நீடிக்க நீடிக்க, இரு கட்சிகளுக்கும் பண நஷ்டம் அதிகமாகிக் கொண்டே வரும். கடைசியில் இருவருமே அழிந்து போவார்கள். இத்தனைக்கும் வாதியும் பிரதிவாதியும் ஒரே ஊரைச் சேர்ந்தவர்கள்; உற்ற பந்துக்கள். இவர்கள் வீண் பிடிவாதத்தினால் வழக்கு நடத்தி அழிந்து போவது எவ்வளவு அறிவீனம்?

இதையெல்லாம் சிந்தித்துப் பார்த்த காந்திஜி பிரதிவாதியாகிய தயேப் சேத்தியிடம் சென்றார். வழக்கை மத்தியஸ்தம் செய்வதற்கு விட்டு முடிவு செய்யும்படி யோசனை சொன்னார்; மிகவும் மன்றாடி வேண்டிக் கொண்டார். ஆனால் உடனே பலன் கிட்டவில்லை.

வக்கீல்களுக்குக் கூலி நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வந்தது. வாதிப் பிரதிவாதிகள் பெரும் செல்வர்கள்தான். ஆயினும் இப்படியே போய்க்கொண்டிருந்தால் அவர்களுடைய சொத்தையெல்லாம் இந்த வழக்கே விழுங்கிவிடும் என்பதில் சந்தேகமில்லை. மேலும் வழக்கிலேயே அதிகமாகக் கவனம் செலுத்தியபடியால் வாதிப் பிரதிவாதிகள் வியாபாரத்தில் கவனம் செலுத்துவது குறைந்து வந்தது.

வக்கீல்கள் தங்கள் கட்சிக்கு அநுகூலமாக மேலும் மேலும் சட்ட நுட்பங்களைக் கிளப்பிக்கொண்டேயிருந்தார்கள். முடிவாக யார் வெற்றியடைந்தாலும் வழக்கில் செலவழிந்த தொகை திரும்பி வராது என்பது நிச்சயம். கோர்ட் பீஸ் சட்டத்தின்படி வக்கீல்களுக்கு இவ்வளவு வீதந்தான் கூலி கொடுக்கலாம் என்று விதிக்கப்பட்டிருந்தது. ஆனால் உண்மையில் அட்டர்னிகளுக்குக் கொடுக்கப்பட்ட தொகை பன்மடங்கு அதிகம். இந்த அநீதிகளையெல்லாம்

எண்ண எண்ணக் காந்திஜிக்குச் சகிக்க முடியவில்லை. வக்கீல் தொழில் மேலேயே வெறுப்பு உண்டாயிற்று. தம்மைப் பொறுத்தவரையில், வாதிப் பிரதிவாதிகளுக்குள் ராஜி செய்து வைப்பதுதான் தமது கடமை என்று கருதினார். அதற்கு மேலும் மேலும் சலியாமல் விடா முயற்சி செய்தார். கடைசியாக, முயற்சி வெற்றி பெற்றது. வழக்கை மத்தியஸ்தத்துக்கு விடத் தயேப் சேத் சம்மதித்தார்.

மத்தியஸ்தர் நியமிக்கப்பட்டார். அவர் முன்னால் இருதரப்பு வாதங்களும் சொல்லப்பட்டன. எல்லாவற்றையும் மத்தியஸ்தர் கேட்டுவிட்டுக் கடைசியாகத் தாதா அப்துல்லாவின் பக்கமே தீர்ப்பளித்தார். அதன்படி முப்பத்தேழாயிரம் பவுனும் செலவு தொகையும் வாதிக்குப் பிரதிவாதி கொடுக்க வேண்டுமென்று ஏற்பட்டது.

தீர்ப்பு நியாயமான தீர்ப்புத்தான். ஆனால் இத்துடன் காந்திஜி திருப்தி அடைந்துவிட வில்லை. தீர்ப்பின்படி பூராத் தொகையையும் உடனே செலுத்த வேண்டுமென்று வற்புறுத்தினால், தயேப் சேத்தினால் செலுத்த முடியாது. அவர் 'இன்ஸால் வெண்ட்' ஆக நேரிடும். அப்போது தென்னாப்பிரிக்காவில் வசித்த போர்பந்தர் வியாபாரிகளுக்குள் "இன்ஸால் வெண்ட் ஆவதைக் காட்டிலும் மரணமடைவதே மேல்" என்னும் உணர்ச்சி குடிகொண்டிருந்தது. பைசா பாக்கி யில்லாமல் பணத்தைக் கொடுத்துவிட வேண்டுமென்றுதான் தயேப் சேத் எண்ணினார். ஆனால் 'இன்ஸால் வெண்ட்' என்னும் அபகீர்த்தியை அடைய விரும்ப வில்லை.

ஆகவே தயேப் சேத்தைத் தப்புவிப்பதற்கு ஒரே ஒரு வழிதான் இருந்தது. பல தவணைகளாகப் பணத்தைப் பெற்றுக் கொள்வதற்குத் தாதா அப்துல்லா இணங்க வேண்டும். அப்படி அவரை இணங்கச் செய்வதற்குக் காந்திஜி பெரும் பிரயத்தனம் செய்தார். மத்தியஸ்தத்திற்கு இரு கட்சியாரையும் ஒப்புக்கொள்ளும்படி செய்ததைக் காட்டிலும் இதற்கு அதிகப் பிரயாசை தேவையாயிருந்தது. முடிவில் தாதா அப்துல்லாவின் மனம் இளகிற்று. நீண்ட காலத்தில் பல தவணைகளாகப் பணம் பெற்றுக்கொள்வதற்கு இசைந்தார். முடிவு இருதரப்பாருக்கும் மகிழ்ச்சி யளித்தது. இந்திய சமூகத்தில் இரண்டு தரப்பாரின் மதிப்பும் உயர்ந்தது.

காந்திஜியோ ஆனந்தக் கடலில் ஆழ்ந்தார். தாம் வந்த காரியம் இவ்வளவு திருப்திகரமாக முடிந்ததே என்று மகிழ்ந்தார். உண்மையில் வக்கீல் தொழில் நடத்த வேண்டிய முறையே இதுதான் என்று கருதினார். இந்த எண்ணம் காந்திஜியின் மனதில் அப்போது ஆழ்ந்து பதிந்துவிட்டது. மகாத்மா தம் சுய சரிதத்தில் கூறுகிறார் :—

"கட்சிக்காரர்களுக்குள் பிளவை நீக்கி ஒற்றுமையை நாட்டுவதே வக்கீலின் உண்மை வேலை என்று அறிந்தேன். இந்தப் படிப்பினை அப்போது என்றும் அழியா வண்ணம் என் இருதயத்தில் பதிந்து விட்டபடியால், பிற்காலத்தில் நான் வக்கீல் தொழில் நடத்திய இருபது ஆண்டுகளிலும் கட்சிக்காரர்களுக்குள் ராஜி செய்து வைப்பதிலேயே என் காலத்தில் பெரும் பகுதி கழிந்தது. நூற்றுக் கணக்கான வழக்குகளை அப்படி நான் ராஜி செய்து வைத்திருக்கிறேன். இதனால் நான் அடைந்த நஷ்டம் யாதுமில்லை; நிச்சயமாக ஆன்ம நஷ்டம் அடையவில்லை."

## 20. ஏசுவின் போதனை

தாதா அப்துல்லாவின் வழக்கு நடந்து கொண்டிருந்தபோது காந்திஜிக்குச் சில விசேஷ அநுபவங்கள் ஏற்பட்டன

மேற்படி வழக்கின் அட்டர்னியான மிஸ்டர் பேகர் என்பவரைக் காந்திஜி பிரிட்டோரியா வந்ததும் சந்தித்தார் அல்லவா? மிஸ்டர் பேகர் கிறிஸ்துவ மதத்தில் மிக்கப் பற்றுள்ளவர். கிறிஸ்துவ மதப் பிரசாரமும் செய்து வந்தார். அவரும் அவருடைய நண்பர்கள் சிலரும் வாரந்தோறும் ஓரிடத்தில் கூடிப் பிரார்த்தனை நடத்தினார்கள். இந்தப் பிரார்த்தனைக் கூட்டங்களுக்கு வரும்படி காந்திஜியை மிஸ்டர் பேகர் அழைத்தார். தமக்கும் தம்முடைய சகாக்களுக்கும் நிற வேற்றுமை உணர்ச்சி கிடையாதென்றும் தெரிவித்தார்.

அவ்விதமே காந்திஜி மிஸ்டர் பேகரின் மதப் பிரசங்கங்களுக்கும் பிரார்த்தனைக் கூட்டங்களுக்கும் சென்றார். இங்கு மிஸ்டர் கோடெஸ் என்பவரையும் இன்னும் சிலரை



யும் காந்திஜிக்கு மிஸ்டர் பேகர் அறிமுகம் செய்து வைத்தார். அவர்கள் வழக்கமான பிரார்த்தனையைச் செய்துவிட்டுப் பின்னர் காந்திஜி கடைத்தேறும் பொருட்டாக விசேஷ பிரார்த்தனை செலுத்தினார்கள்.

"ஆண்டவனே! இன்று எங்களிடையே புதிதாக வந்திருக்கும் சகோதரருக்கு ஞான மார்க்கத்தைக் காட்டி அருள்வீராக! எங்களுக்கு அருளிய மனச் சாந்தியை அவருக்கும் தருவீராக! எங்களை ஆட்கொண்ட ஏசு பெருமான் அவரையும் ஆட்கொள்ளட்டும்!" என்று பிரார்த்தித்தார்கள்.

பிறகு காந்திஜி அடிக்கடி அந்த நண்பர்களைச் சந்தித்து மத விஷயங்களைப் பற்றிச் சர்ச்சை செய்து வந்தார். அவர்கள் காந்திஜியைக் கிறிஸ்தவ மதத்தில் சேர்த்து விடும்படி அடிக்கடி போதனை செய்தார்கள். கிறிஸ்தவ மதத்தில் சேர்ந்தவர்களின் பாவங்களையெல்லாம் ஏசுநாதர் தாம் ஒப்புக்கொண்டு அவர்களுக்கு மோட்சத்தை அளிக்கிறார் என்றும், ஆகையால் பாவம் நீங்கி மோட்சம் அடையக் கிறிஸ்தவ மதத்தில் சேருவது ஒன்றே வழி யென்றும் வற்புறுத்தினார்கள்.

இந்த வாதம் காந்திஜிக்குத் திருப்தி அளிக்கவில்லை. "பாவம் செய்துவிட்டு அதன் பலனை அநுபவியாமல் தப்பவேண்டும் என்று நான் ஆசைப்படவில்லை. பாவத்தி லிருந்தும் பாவ எண்ணங்களி லிருந்தும்கூட விடுதலை பெற விரும்புகிறேன். அதற்காக இடைவிடாமல் நான் முயற்சி செய்யப் போகிறேன்" என்று சொன்னார்.

தம்பி! மகாத்மாவின் ஆவி பிரிந்த பிறகு அவருடைய திருமேனியைப் படம் எடுத்துப் பத்திரிகைகளில் போட்டிருந்தார்களே, அது நினைவிருக்கிற தல்லவா? அந்தப் படத்தில் மகாத்மாவின் கழுத்திலே துளசிமணி மாலை இருந்ததை ஒருவேளை நீ கவனித்திருப்பாய். துளசிமணி மாலை அணியும் வழக்கத்தைக் காந்தி மகாத்மா இளம் வயதிலேயே கைக்கொண்டிருந்தார்.

மிஸ்டர் கோடெஸ் என்னும் கிறிஸ்தவ நண்பர் காந்திஜி கழுத்தில் அணிந்திருந்த துளசி மணி மாலையைப் பார்த்துவிட்டு, "இந்த மாலையை எதற்காக அணிந்திருக்கிறீர்கள்? இதெல்லாம் சுத்தக் குருட்டு நம்பிக்கை. அதை இங்கே கொடுத்து விடுங்கள்! இப்போதே உடைத்து எறிந்து விடுகிறேன்!" என்றார்.

"இல்லை! இதை உடைக்கக் கூடாது. இந்த மாலை என் தாயார் எனக்கு அளித்த புனிதச் சின்னம்" என்றார் காந்திஜி.

"இதனிடம் உங்களுக்கு நம்பிக்கை உண்டா? இந்த மாலையை எடுத்து விட்டால் மோட்சம் கிட்டாது என்று நினைக்கிறீர்களா? உண்மையாகச் சொல்லுங்கள்!" என்று மிஸ்டர் கோடெஸ் கேட்டார்.

"இந்த மணி மாலையின் உட்பொருள் என்னவோ எனக்குத் தெரியாது. இதை அணியாவிட்டால் எனக்குக் கெடுதல் நேர்ந்துவிடும் என்றும் நான் நினைக்கவில்லை. ஆனால் என் தாயார் அன்புடன் என் கழுத்தில் அணிவித்த மாலையைத் தகுந்த காரணமின்றி எடுத்து எறிய மாட்டேன்! இதை உடைக்கவும் சம்மதிக்க மாட்டேன்!" என்றார் காந்திஜி.

இவ்வாறாகப் பல தடவைகளில் நண்பர்கள் எவ்வளவோ வற்புறுத்திச் சொல்லியும், காந்திஜி கிறிஸ்தவ மதத்தில் சேரத் தயாராகவில்லை. ஆனால் கிறிஸ்தவ மத போதனைகளில் மிகப் பற்றுக் கொண்டார். முக்கியமாக "தீமை செய்தவர்களுக்கும் நன்மையே செய்ய வேண்டும்" என்னும் ஏசு நாதரின் போதனை அவருடைய சிந்தையைக் கவர்ந்தது.

மேற்படி கொள்கையில் காந்திஜியின் நம்பிக்கையைச் சோதிக்கும்படியான சம்பவம் ஒன்று அச் சந்தர்ப்பத்தில் நடந்தது.

பொது நடைப் பாதைகளில் இந்தியர்கள் நடக்கக் கூடாது என்றும், இரவு ஒன்பது மணிக்குமேல் அனுமதிச் சீட்டு இல்லாமல் இந்தியர்கள் வெளியில் புறப்படக் கூடாதென்றும் டிரான்ஸ்வாலில் சட்டங்கள் இருந்தன வல்லவா?

மிஸ்டர் கோடென்ஸூம் காந்திஜியும் இரவில் வெளியில் உலாவச் செல்வது வழக்கம். இரவு பத்து மணிக்குத்தான் அவர்கள் திரும்பி வருவார்கள். இப்படிச் சட்ட விரோதம் செய்வதற்காகப் போலீஸார் காந்திஜியைக் கைது செய்தால் என்ன பண்ணுவது என்ற கவலை காந்திஜியைக் காட்டிலும் அதிகமாக மிஸ்டர் கோடென்ஸூக்கு இருந்தது. ஆகையால் அவர் சர்க்கார் வக்கீலான டாக்டர் கிராஸே என்பவரிடம் காந்திஜியை அழைத்துப் போனார். இங்கிலாந்தில் காந்திஜி பாரிஸ்டர் பயிற்சி பெற்ற ஸ்தாபனத்திலேயே கிராஸேயும் பயிற்சி பெற்றவர். அவர் காந்திஜியிடம் மிக்க அநுதாபம் தெரிவித்தார். சாதாரண அனுமதிச் சீட்டுக்குப் பதிலாகப் போலீஸ் தொந்தரவு இல்லாமல் எப்போது வேண்டுமானாலும் வெளியே போகக் கூடியவாறு ஒரு கடிதமும் தந்தார். இந்தக் கடிதத்தைக் காந்திஜி எப்போது வெளியே புறப்பட்டாலும் கையோடு எடுத்துப் போவது வழக்கம்.

கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்த மனிதர்கள் இப்படிப் பட்ட அநீதமான சட்டங்களையெல்லாம் இயற்றி யிருக்கும்போது, கிறிஸ்துவ மதத்தைத் தழுவிய உடனே ஒருவன் பரிசுத்தனாகி மோட்ச சாம்ராஜ்யத்துக்கு உரியவனாகிவிடுவான் என்று நம்புவது காந்திஜிக்குக் கஷ்டமா யிருந்திருக்கு மல்லவா?

உண்மையில், ஒருவனுக்கு மோட்சம் கிடைப்பதும் கிடைக்காததும் அவனுடைய நடத்தையையும் மனத் தூய்மையையும் பொறுத்தனவே தவிர, அவன் சம்பிரதாயமாகக் கடைப் பிடிக்கும் வெளி மதாச்சாரங்களைப் பொறுத்தன வல்ல என்பது காந்திஜியின் கொள்கை. இந்தக் கொள்கை ருஷியாவின் மகான் டால்ஸ்டாய் எழுதிய "ஆண்டவன் ராஜ்யம் உனக்குள்ளே" என்னும் புத்தகத்தைப் படித்ததில் உறுதி யாயிற்று. காந்திஜியின் ஆத்மீக வளர்ச்சிக்கு மேற்படி புத்தகம் பெரிதும் துணையா யிருந்தது. தம்பி! நீ இன்னும் கொஞ்சம் பெரியவனான பிறகு மேற்படி புத்தகத்தை அவசியம் படிக்க வேண்டும். இன்னும் மகான் டால்ஸ்டாய் எழுதியிருக்கும் சிறு கதைகள், நாவல்கள், கட்டுரை நூல்கள் முதலியவற்றையும் படிக்க வேண்டும். டால்ஸ்டாயின் நூல்கள் உலக வாழ்வின் இருளைப் போக்கும் ஞான தீபங்கள்; அதோடு, அவை மிகச் சிறந்த இலக்கியப் பொக்கிஷங்களுமாகும். நிற்க.

மேற்கண்டவாறு விசேஷ அனுமதிக் கடிதம் பெற்றிருந்துங்கூட, பொது நடைப் பாதைகளில் இந்தியர்கள் நடக்கக் கூடாது என்ற விதியினால் காந்திஜி ஒரு சமயம் பெருந் தொல்லைக்கு ஆளாக நேர்ந்தது.

தினம் இரவு நேரத்தில் காந்திஜியும் மிஸ்டர் கோடென்ஸூம் உலாவச் செல்லும் போது 'அக்கிராசனர் வீதி' என்று வழங்கிய சாலை வழியாக ஒரு மைதானத்துக்குப் போவது வழக்கம். இந்த வீதியில் தென்னாப்பிரிக்கா சரித்திரத்தில் பிரசித்தி பெற்ற பிரசிடெண்ட் குரூகர் என்பவரின் வீடு இருந்தது. டிரான்ஸ்வால் சர்க்காரின் தலைவராக விளங்கிய அக்கிராசனர் குரூகர் எளிய வாழ்வைக் கடைப் பிடித்தவர். அவருடைய வீடு படாடோபமில்லாத சிறிய வீடு. பக்கத்து வீடுகளுக்கும் அக்கிராசனர் குரூகர் வீட்டுக்கும் வித்தியாசம் ஒன்றுமே தெரியாது. பிரிட்டோரியாவில் லட்சாதிபதிகளான பல வெள்ளைக்காரர்கள் உண்டு. அவர்களுடைய பங்களாக்கள் பிரமாதமா யிருக்கும். ஆனால் குரூகரின் வீடு வெகு சாமான்



ருஷ்ய ஞானி டால்ஸ்டாய்.

யமானது. வீட்டின் வாசலில் ஒரு சேவகன் எப்போதும் நின்று கொண்டிருப்பான். இதிலிருந்துதான் அது ஒரு உத்தியோகஸ்தரின் வீடு என்பதைக் கண்டு பிடிக்கலாம்.

அந்த வீட்டுக்கு முன்னாலிருந்த நடைப் பாதை வழியாகவே காந்திஜி எப்போதும் உலாவப் போவது வழக்கம். பல நாள் வரையில் இதற்குத் தடை ஒன்றும் ஏற்படவில்லை. ஒருநாள் ஏற்பட்டு விட்டது!

காவலுக்கு நிற்கும் சேவகர்கள் அடிக்கடி மாறுவது இயல்பே யல்லவா? ஒருநாள் ஒரு புதிய சேவகன் வந்தான். அவன் நின்ற இடத்தின் அருகாமையில் காந்திஜி சென்றபோது அந்த மூர்க்கன் சிறிதும் எச்சரிக்கை செய்யாமலும் "அப்பால் போ!" என்று கூடச் சொல்லாமலும் காந்திஜியை உதைத்துத் தள்ளினான்!— இப்படி ஒரு மூர்க்கன் செய்வான் என்று நம்புவதற்கே உனக்கு இப்போது கஷ்டமாயிருக்கிற தல்லவா? — ஆனால் இதைவிட நம்புவதற்குக் கஷ்டமான அபூர்வ நிகழ்ச்சியைக் கேள்!

தற்செயலாக அதே சமயத்தில் அந்தப் பக்கம் மிஸ்டர் கோடெஸ் குதிரைமேல் போய்க் கொண்டிருந்தார். மேற்படி சம்பவத்தைப் பார்த்தார். பரபரப்புடன் காந்திஜியிடம் ஓடி வந்து அனுதாபம் தெரிவித்தார். அதோடு, "இந்த முரடன்மீது கட்டாயம் வழக்குத் தொடர வேண்டும்; நான் சாட்சி சொல்லுகிறேன். கட்டாயம் இவன் தண்டிக்கப்படுவான்!" என்றார்.

மகாத்மா அதற்கு என்ன சொன்னார் தெரியுமா? "வேண்டாம், வேண்டாம்! பாவம்! அவன் என்ன கண்டான்? கறுப்பு மனிதர்களை யெல்லாம் இப்படி நடத்தியே



இவனுக்குப் பழக்கம். இந்த நாட்டின் சட்டங்கள் அவ்வளவு இலட்சணமாக இருக்கின்றன. ஆகவே இந்தச் சேவகன்மேல் வழக்குத் தொடருவதில் என்ன பயன்? எனக்கு ஒருவன் கெடுதல் செய்ததற்காக அவன் பேரில் நான் கோபப்பட மாட்டேன்; பழி வாங்கவும் எண்ண மாட்டேன். 'தீமை செய்தவனை மன்னித்து விடு' என்பது ஏசுநாதரின் திருவாக்கு அல்லவா? என்னைத் துன்புறுத்திய இவனை நான் மன்னித்து விட்டேன். வழக்குத் தொடர வேண்டிய அவசியமில்லை!" என்றார் காந்திஜி.

மிஸ்டர் கோடெஸ் திகைத்துப் போனார். "ஆஹா! ஏசுநாதரின் போதனையை வாழ்க்கையில் உண்மையாகவே கடைப்பிடிக்கத் துணிச்சல் உள்ள மனிதர் இதோ ஒருவர் இருக்கிறாரே!" என்று வியந்தார். நாளடைவில் இந்தச் செய்தி பரவியபோது உலகமெல்லாமே ஆச்சரியப்பட்டது. ருஷியாவில் டால்ஸ்டாயும், இந்தியாவில் கோகலேயும், பெஸண்டு அம்மையும் கேட்டு வியந்தார்கள். "இவர் ஒரு மகாத்மா" என்று பலரும் பாராட்டினார்கள்.

பிறகு மிஸ்டர் கோடெஸ் அந்தப் போலீஸ்காரனிடம் சென்று டச்சு பாஷையில் பேசினார். அவனுடைய நடத்தை எவ்வளவு மிருகத்தனமானது என்பதைச் சொல்லி, காந்தி மகாத்மா அவனிடம் காட்டும் கருணை எவ்வளவு தெய்விகமானது என்பதையும் எடுத்துக் கூறினார். அந்த முரட்டுச் சேவகனுடைய மனம் இளகிவிட்டது. காந்திஜியிடம் வந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். "மன்னிப்புக் கேட்க அவசியமே இல்லை. உன்னை முன்னமே நான் மன்னித்து விட்டேன்" என்றார் காந்தி மகாத்மா.

அந்தப் பாதை வழியாகப் பிறகு மகாத்மா போகவில்லை. ஒருவேளை மறுபடியும் சேவகன் மாறலாம். அவன் எப்படிப் பட்டவனோ என்னமோ? அவன் மீண்டும் இப்படி ஏதாவது செய்து வைத்தால்? காந்திஜி தமக்கு நேரக் கூடிய கஷ்டத்தைப் பொருட்படுத்தவில்லை. ஆனால் ஒரு ஏழைச் சேவகன் அறியாமையினால் முரட்டுச் செயல் புரிவதற்குக் காரணமாக அவர் விரும்ப வில்லை.

செய்ய வேண்டியது வேறு காரியம். தென்னாப்பிரிக்காவில் உள்ள அநீதி நிறவேற்றுமைச் சட்டங்களை ஒழித்துக் கறுப்பு மனிதர்களைக் காப்பாற்ற வேண்டும். அம்பை விட்டவனை நோகாமல் அம்பை நொந்து கொள்வதில் என்ன பயன்? (தொடரும்)



# பாவம், கபோதி!

எஸ். ஆறுமுகம்..

அன்று இரவு மணி எட்டு இருக்கும். மோஹனின் தகப்பனார் காசிநாதய்யர் சாப்பிட்டுவிட்டு 'ஹாய்'யாக வாசல் திண்ணையில் வீற்றிருந்தார். அவருக்கு அருகில் அவருடைய மனைவி சாவித்திரி வெற்றிலையை மடித்துத் தன் கணவரிடம் நீட்டிய வண்ணம் கீழே உட்கார்ந்திருந்தாள்.

அப்பொழுது, "தாயே, கொஞ்சம் அன்னம் போடுங்க, அம்மா! கண்ணில்லாத கபோதிங்க. ஏழைக்கு மனமிரங்குங்க. தாயே! உங்க பிள்ளை குட்டிகளுக்கு ஏழேழு ஜென்மத்துக்கும் யாதொரு குறைவும் வராது, ஐயா!" என்று கூறிக் கொண்டே எதிரில் பிச்சைக்காரன் ஒருவன் வந்து நின்றான்.

கபோதியின் பேரில் அவர்கள் இருவருக்கும் அன்பு கனிந்தது. ஒரே சமயத்தில் தம்பதிகளின் பார்வை அவன் மீது விழுந்தது. தெருவில் இருந்த லாந்தர் வெளிச்சத்தில் பிச்சைக்காரனின் முகம் ஸ்பஷ்டமாகத் தெரிந்தது. பாவம், கண்ணில்லாத கபோதிதான்!

உடனே மோஹனின் தாயார் ஓடோடிப் போய்த் தட்டு நிறையச் சாதம் கொண்டு வந்து அந்தக் கபோதிக்குப் போட்டாள். அவனுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. "சாமி, ராத்திரியிலே ரொம்பக் குளிருதுங்க; அதாலே தூக்கங் கூட வரலிங்க. எதுனாச்சும் மேலே போத்திக்க சொக்காய் ஒண்ணு பார்த்துத் தயவு பண்ணுங்க!" என்றான்.

அடுத்த நிமிஷம் புதுச் சட்டையொன்றைக் கொண்டு வந்து கொடுத்தார் காசிநாதய்யர். அப்படியே சாஷ்டாங்கமாகக் கீழே விழுந்து அவரைக் கும்பிட்டுவிட்டு விடை பெற்றுச் சென்றான் கபோதி.

கால் மணி நேரம் சென்றது. "ஆமாம், நம்ப பையன் மோஹனுடைய தல்லவா அந்தச் சட்டை! புதுச் சட்டையாச்சே! அவன் வந்தால் கோபித்துக் கொள்ள மாட்டானா?" என்று சாவித்திரி அம்மாள் தன் கணவனை விசாரித்துக் கொண்டிருக்கையில், அவர்களது ஏக புதல்வன் மோஹன் உள்ளே நுழைந்தான்.

புதுச் சட்டை என்று தெரியாது யாசகம் கொடுத்து விட்டதற்காக அவன் கோபித்துக் கொள்வானோ என்னமோ என்று எண்ணி, மெல்ல பீடிகை போட ஆரம்பித்தார் தகப்பனார்.

"மோஹன், சற்று முன்னால் நீ வரவில்லையே! பாவம், யாரோ ஒரு கபோதிப் பிச்சைக்காரன்......"

அதற்குள் மோஹன் இடைமறித்து, "இங்கே கூட வந்தானா, அவன்? அவனுக்கு நீங்கள் ஏதாவது கொடுத்தீர்களா?" என்று கேட்டான்.

"கொடுக்காமலிருப்போமா? நிறையச் சாதம் போட்டுச் சட்டை ஒன்றும் கொடுத்தோம்!" என்று மென்று விழுங்கிக் கொண்டே சொன்னார் தகப்பனார்.

"அப்படியா, நீங்கள் அவனுக்குச் சட்டை கொடுத்தீர்களல்லவா? அவனும் எனக்கு ஒரு சட்டை கொடுத்தான்!" என்று நிதானமாகக் கூறி, அவன் அளித்த சட்டையை விரித்துக் காண்பித்தான் மோஹன்.

தகப்பனருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. ஏனெனில், அவர் பிச்சைக்காரனுக்குச் சற்று முன்பு யாசகம் கொடுத்த அதே சட்டையைத்தான் மோஹன் காண்பித்ததுவும்! என்ன விந்தை இது!

இவ்வாறு எண்ணி அவர் விழித்துக் கொண்டிருந்தபோது அவருக்குப் பின்னால் ‘குபீர்’ என்ற சிரிப்பொலி கேட்டது; திரும்பிப் பார்த்தார்.



நாலைந்து பையன்கள் அவரை நோக்கி ஓடி வந்து நின்றனர். அவர்களில் ஒருவன், “ஸார், உங்களுக்குத் தெரியாதா? சற்று முன் கபோதியாக உங்கள் முன் காட்சி யளித்துப் புதுச் சட்டை யொன்றை ‘அபேஸ்’ செய்து கொண்டு சென்ற அந்தப் பிச்சைக்காரன் சாக்ஷாத் தங்கள் திருக்குமாரன் மோஹன்தான்! இன்று எங்கள் காலேஜின் வருஷாந்திர விழாவில் நடந்த ‘மாறு வேஷப் போட்டி’ யில் முதற் பரிசு உங்கள் மோஹனுக்குத்தான் கிடைத்தது! அங்கும் இதே கபோதி வேஷம்தான்! அப்படியே மெய் மறந்து விட்டனர் சபையோர்கள்!” என்றான்.

“உண்மையாகவா!” என்று மோஹனின் தாயாரும் தகப்பனரும் ஏக காலத்தில் கேட்டனர்.

“ஆம், அம்மா!” என்று சொல்லிச் சிரித்தான் மோஹன்.

பெற்றோர்களின் சந்தோஷத்துக்குக் கேட்க வேண்டுமா, என்ன?

---

# காயம் ஆகுமே!

சீனர்களுக்குள்ளே ஓர் அபூர்வமான வழக்கம் உண்டு. அவர்கள் எவ்வளவு பலமாகச் சண்டை போட்டுக் கொண்டாலும் கை கலக்க மாட்டார்கள்.

ஒரு அமெரிக்கன் சீனாவுக்குப் போனான். அவன் சீனாவுக்குப் புதியவன். ஆகையால், துணைக்கு ஒரு சீனப் பையனைத் தன்னோடு அழைத்துக் கொண்டு போனான். வழியில் ஒரு பெரும் கூட்டம் கூடியிருந்தது. கூட்டத்துக்கு மத்தியில் இரண்டு பேர் இருந்தார்கள். அவர்கள் இருவர் முகத்திலும் கோபம் பொங்கிற்று.

ஒருவன் தன் தோளால் மற்றவனைத் தள்ளினான். மற்றவன் அதைச் சமாளித்துக் கொண்டு எதிரியை விழித்துப் பார்த்தான். அவனுடைய கண்ணில் கோபம் ஜொலித்தது. எதிரியும் விழித்துப் பார்த்தான். உடனே இருவரும் முன்னாலே வந்து ஒருவரை யொருவர் தோளால் இடித்துக் கொண்டார்கள். ஒருவன், தடாலென்று கீழே சாய்ந்தான். அவனுடைய உடம்பும் துணி மணிகளும் புழுதிமயமாயின. ஆனால், எழுந்திருக்கவில்லை. எதிரி குனிந்து, அவனை அடிப்பதுபோலப் பாவனை செய்தான்.

இந்த அதிசயத்தைப் பார்த்துக்கொண்டே யிருந்த அமெரிக்கனுக்குச் சிரிப்பு உண்டாயிற்று. கூட்டத்தில் இருந்தவர்கள் எல்லோரும் அவனைப் பார்த்தார்கள்.

சீனச் சிறுவன் அமெரிக்கனைப் பார்த்து, “ஏன் ஸார், சிரிக்கிறீர்கள்?” என்று கேட்டான்.

“ஒன்றும் இல்லை. இவர்கள் சண்டை போடுவது வேடிக்கையாக இருக்கிறது. இந்த மாதிரி சண்டை போடுவதை நான் எங்கும் பார்த்ததே இல்லை.”

“அமெரிக்காவில் நீங்கள் இந்த மாதிரி சண்டை போடுவது இல்லையா?”

“இல்லையே!”

“பின் எப்படிச் சண்டை போடுவீர்கள்?”

அந்த அமெரிக்கன், கையை மூடிப் பிடித்து, “இப்படி” என்று பையனுடைய கன்னத்தில் லேசாகக் குத்திக் காட்டினான்.

அந்தப் பையன் திடுக்கிட்டு, “ஓ, அந்த மாதிரி சண்டை போட்டால் உடம்பில் காயம் உண்டாகுமே!” என்றான்.


EWI
LTD.
SYMBOL OF QUALITY
PHŒNIX
MODEL
1948
Fans
GIVE YOU COMPLETE SATISFACTION
CONTACT Sole Distributors for Southern Madras including States and Madras City:
RM. S. & CO. LTD., 16. Broadway, Madras.
Phone: 4060
Grams: AREMESCO
Factory Representative:
K. RAGHAVACHARI, 310/11, LINGHI CHETTY ST., MADRAS - 1




## மூன்றாம் அத்தியாயம்

# பம்பாய்க் கடிதம்

கிட்டாவய்யர் பட்டணத்து நாகரிகத்தைக் கிராமங்களுக்குக் கொண்டு வர ஆசைப்பட்டார். அந்த ஆசையின் அறிகுறியாகச் சில காலமாய் அவர் தமது மனைவியைப் பெயர் சொல்லி நாலு பேருக்கு முன்னால் கூப்பிடவும் அவளுடன் சங்கோசமின்றிச் சம்பாஷிக்கவும் ஆரம்பித்திருந்தார்.

பீஹார் பூகம்பத்தையும் லலிதா தபால் ஆபீஸ் சென்றதையும் சம்பந்தப்படுத்திய தமது மனைவியின் பேதைமையை எண்ணியபோது அவர் முகம் புன்னகை பூத்து மலர்ந்தது.

"சரசு! பீஹாரிலே பூகம்பம் வந்தால் இவ்விடத்தில் நமக்கு என்ன வந்தது? வீண் காபரா செய்யாதே!" என்று சொன்னார்.

"இது என்ன பேச்சு! பூகம்பம் பீஹாரிலிருந்து இவ்விடம் வர எத்தனை நேரம் செல்லும்?"

"அதெல்லாம் ஒன்றும் வராது. நம் ஊருக்கும் பீஹாருக்கும் ஆயிரத்தைந்நூறு மைல் தூரம். தெரியுமா? வீணாக அலட்டிக் கொள்ளாதே!"

"ஆமாம்; நான் வீணாக அலட்டிக் கொள்கிறேன். நீங்கள்......"

இந்தச் சமயத்தில் சிமாச்சு வய்யர் மத்தியஸ்தம் செய்ய ஆரம்பித்தார். "ஓய்! பெற்ற மனம் பித்து என்று கேட்டதில்லையா? பெற்ற தாய்க்கு அப்படித்தான் கவலையாயிருக்கும். நம்மைப் போன்ற தடியர்களுக்கு நிர்விசாரம்!" என்றார்.

"ஆமாம், ஆமாம்! உலகத்தில் ஒருவரும் பெண்ணைப் பெறவில்லை. இவள்தான் அதிசயமாகப் பெற்றாள்! பூவரசை மரத்தைத் தேள் கொட்டிற்று — புளிய மரத்துக்கு நெறி கட்டியது என்ற கதையாக, பீஹாரில் பூகம்பம் என்றால், அதற்காக நாம் பயப்பட்டுச் சாக வேண்டும் என்கிறாள். பெண்ணைப் படிக்க வைக்க வேண்டும் என்று இதற்காகத்தான் சொல்லுகிறது!"

"உங்களை உங்கள் அம்மா படிக்க வைத்தது போலத்தான்!"

கிட்டாவய்யர் சிறு பையனாயிருந்த போது கிராமத்துப் படிப்பு முடிந்ததும் அவரைப் பட்டணத்துக்கு மேல் படிப்புக்கு அனுப்ப எத்தனித்திருந்தார்கள். எல்லா ஏற்பாடும் செய்து வண்டி பூட்டிக் கிட்டாவும் அவர் தகப்பனாரும் அதில் உட்கார்ந்து புறப்பட்டபோது, எதிரே ஜானகிப் பாட்டி வந்தாள். சகுனம் சரியாயில்லை யென்று கிட்டாவய்யர் தாயார் அன்றைக்குப் போகவே கூடாதென்று தடுத்து விட்டாள். அன்று நின்ற பிரயாணம் அடியோடு நின்று போயிற்று.



இதைக் கேள்விப்பட்டிருந்த சரஸ்வதி அம்மாள் சமயம் வாய்த்தபோதெல்லாம் சொல்லிக் காட்டுவதுண்டு.

ஆனால் எவ்வளவோ பொறுமைசாலியான கிட்டா வய்யருக்கு இந்த விஷயம்பற்றி யார் பேசினாலும் பிடிப்பதில்லை. ஆகவே, "சரி, நிறுத்து! சுத்த அதிகப் பிரசங்கி!" என்றார்.

மறுபடியும் சிமாச்சு வய்யர் குறுக்கிட்டு, "ஓய்! மத்தியானம் சாப்பாட்டுக்கு மேலே ஒரு 'பிக்கு' ஆட்டம் போடலாமா?" என்றார்.

"பேஷாய்ப் போடலாம்; இங்கேயே சாப்பிடலாமே ஓய்!" என்றார் கிட்டாவய்யர்.

"வேண்டாம்! அப்புறம் நம்முடைய வீட்டில் ......" என்று சொல்லிக் கொண்டே சிமாச்சு வய்யர் வெளியேறினார்.

கிட்டாவய்யர் கொல்லைக் கிணற்றடிக்குக் குளிப்பதற்குச் சென்றார்.

சரஸ்வதி அம்மாள் வீட்டு வாசலுக்குச் சென்று குழந்தை லலிதா பீஹார் பூகம்பத்துக்குத் தப்பிப் பத்திரமாய் வந்து சேர வேண்டுமென்ற கவலையோடு அவன் வரும் வழியைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

• • •

அக்கிரகாரத்தின் வீதி திரும்பி அரை பர்லாங்கு தூரம் போனதும் பெரிய சாலை இருந்தது. சாலையோடு அரை பர்லாங்கு தூரம் நடந்தால் தபால் சாவடி இருந்தது.

லலிதா ஓட்டமும் நடையுமாகச் சென்று ஐந்து நிமிஷத்தில் தபால் ஆபீஸை அடைந்தாள்.

அவள் உள்ளே போவதற்குள் ரன்னர் தங்கவேலு தபால் மூட்டையைக் கொண்டு போய்ப் போஸ்டு மாஸ்டர் முன்னாலிருந்த மேஜையின் மேல் வைத்திருந்தான்.

அந்த மேஜையின் இலட்சணத்தைச் சொல்லி முடியாது. நாலு அடி நீளமும் மூன்று அடி அகலமும் உள்ள அந்த மேஜையில் நாலாயிரம் இடத்தில் மை கொட்டிய அடையாளங்கள் காணப்பட்டன.

போஸ்டு மாஸ்டர் பேனாவை மேஜை மேல் தீட்டி விட்டுத்தான் எழுதுவது வழக்கமோ என்று சொல்லும்படி தோன்றியது.

தபால்கார பாலகிருஷ்ணன் ரன்னர் தங்கவேலுவைப் பார்த்து, "ஏன் அப்பா இத்தனை நேரம்? வழியில் எங்கேயாவது படுத்துத் தூங்கிவிட்டு வந்தாயோ?" என்றான்.

"தினம் உங்களுக்கு இது ஒரு கேள்வி. ஐந்து மைல் ஜிங்கு ஜிங்கு என்று ஓடி வந்து பார்த்தால் தெரியும்?" என்றான் தங்கவேலு.

"சும்மா இருங்க, அப்பன்மார்களே! இதோ கிட்டாவய்யர் வீட்டுக்குழந்தை வருகிறது!" என்று சொல்லிவிட்டுப் பங்காரு நாயுடு தம் கையிலிருந்த நோட்டுப் புத்தகத்தில் ஆழ்ந்து கவனம் செலுத்தினார்.

லலிதா ஓடி வந்ததினால் ஏற்பட்ட மூச்சு இரைப்புடனே "போஸ்டு

மாஸ்டர்! எனக்கு ஏதாவது லெட்டர் வந்திருக்கிறதா?" என்று கேட்டாள்.

போஸ்டு மாஸ்டர் அப்போதுதான் அவளுடைய வரவை அறிந்தவர்போல் நிமிர்ந்து பார்த்து, "ஓகோ! நீயா குழந்தை? கொஞ்சம் உட்காரு! தபால் கட்டை உடைத்துப் பார்த்துச் சொல்கிறேன்!" என்றார்.

"இன்னும் கட்டு உடைக்க வில்லையா, ஸார்!"

"கட்டும் உடைக்கவில்லை; குட்டும் உடைக்கவில்லை!......"

"சீக்கிரம் உடையுங்கோ, ஸார்!"

"என்ன அம்மா அவ்வளவு அர்ஜண்டு?"

"அர்ஜண்டுதான், ஸார் இன்றைக்குப் பம்பாயிலிருந்து எனக்கு லெட்டர் வரும்!"

"இவ்வளவுதானே? ஹூம்! பம்பாயி லிருந்துதானே? இதற்கா இவ்வளவு அவசரம்? சிங்கப்பூரிலே யிருந்துதான் வருகிறதாக்கும் என்று பார்த்தேன்."

"சிங்கப்பூர் ரொம்ப ஒசத்தியோ? எங்க பம்பாயிலே......"

"உங்க பம்பாய் மட்டும் ஒசத்தியோ? எங்க சிங்கப்பூரிலே......"

"எங்க பம்பாயிலே, விக்டோரியா டெர்மினஸ் ஸ்டேஷனை நீங்கள் பார்த்தால் அப்படியே அசந்து போய் விடுவேன், ஸார்!"

"எங்கள் சிங்கப்பூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு உறைபோடக் காணாது உங்க விக்டோரியா டெர்மினஸ்! தெரியுமா, குழந்தை!"

"எங்க பம்பாயிலே எட்டு மாடி வைத்த வீடு இருக்கு, ஸார்!"

"ஹூம்; இவ்வளவுதானே? எங்க சிங்கப்பூரிலே இருபத்துநாலு மாடி வைத்த வீடு இருக்கே?"

"எங்க பம்பாயிலே மச்சு வைத்த மோட்டார் பஸ் இருக்கே?"

"எங்க சிங்கப்பூரிலே மச்சு வைத்த ரிக்ஷா வண்டி இருக்கே?"

"எங்க பம்பாயிலே வழுவழு வென்று தார் ரோடு இருக்கே!"

"ஹூம்! எங்க சிங்கப்பூரிலே ரப்பர் ரோடு போட்டிருக்கே!"

"உம், வந்து, வந்து, எங்க பம்பாயிலே...... உம், எங்க அத்தங்கா சீதா இருக்காளே!"

"ஹூம்! ......எங்க சிங்கப்பூரிலே எங்க அய்யங்கார் இருக்காரே?"

"உங்களோடு பேச்சிலே போட்டி போட என்னால் முடியாது! தபால் கட்டைப் பிரிங்கோ, ஸார்!"

"நிஜமாய்ப் பிரிச்சு விடட்டுமா?"

"நிஜமாய், சீக்கிரமாய்ப் பிரிங்கோ, ஸார்! பிளீஸ், ஸார்! உங்களுக்கு ரொம்பப் புண்ணியம் உண்டு, ஸார்!"



"இதோ உடைச்சுட்டேன், குழந்தை! இதோ உடைச்சுட்டேன்!" என்று சொல்லிக்கொண்டே கட்டை உடைக்கப் போன பங்காருநாயுடு, "ஹூம்; ஹூம்; இந்தத் தபால் கட்டிலேயிருந்து ஏதோ வாசனை வருகிறதே! வெங்காய வாசனை மாதிரி இருக்கே! ஏண்டா, தங்கவேலு! தபால் கட்டுக்குள்ளே மசால் வடை இருக்காடா?" என்று சொல்லி விட்டுத் தயங்கினார்.

"என்ன, ஸார், விளையாடறேள்? மசால்வடை வாசனை வாசலிலே மிட்டாய்க் கடையிலே யிருந்து வருகிறது என்று தெரியவில்லையா?"

"ஓஹோ! அப்படியா? என்னடா அப்பா என்று பார்த்தேன். ஹார் ஹரய்யர் இன்றைக்கு மசால்வடை போடுகிறாரோ? அடாடா! வீட்டிலே யிருந்து கையிலே காலணாக்கூடக் கொண்டு வராமல் மறந்து வந்துவிட்டேனே? இருந்தால் இந்தக் குழந்தைக்கு வாங்கிக் கொடுக்கலாமே?"

"அதைப்பற்றிக் கவலைப்படாதீங்க, ஸார்! கட்டை உடையுங்கள், ஸார்!" என்று சொல்லிக்கொண்டே லலிதா வெளியே ஓடினாள். மிட்டாய்க் கடையிலே யிருந்து நாலு அணாவுக்கு மசால்வடை வாங்கிக்கொண்டு வந்து போஸ்டு மாஸ்டரின் மேஜையின் மேல் வைத்தாள்.

"ஓகோ! நீ போய் வாங்கிக்கொண்டு வந்தாயா? எதற்காக இதெல்லாம்!" என்று சொல்லிக்கொண்டே போஸ்டு மாஸ்டர் தபால் கட்டைப் பிரித்துத் தபால்களின் விலாசத்தை ஒவ்வொன்றாய்ப் பார்க்கத் தொடங்கினார்.

"அச்சா! இதோ இருக்கிறது குழந்தை, பம்பாய்க் கடிதம்! ஆனால் விலாசம் தப்பா இருக்கே! உங்க அப்பா பேரல்லவா......"

"இங்கே கொடுங்க ஸார், பார்க்கலாம். இது எங்க அப்பாவுக்குத்தான். எங்க அத்திம்பேர் எழுதியிருக்கார். இன்னும் பாருங்க, ஸார்! எனக்குக் கட்டாயம் லெட்டர் இருக்கும்!"

"ஆஹா! இதோ ஒன்று இருக்கு. இதுவும் உங்க அப்பாவுக்குத்தான்."

"இங்கே கொடுங்கள்! ஆமாம்; இதையும் அப்பாவிடம் கொடுத்து விடுகிறேன். எனக்கு ஏதாவது கடிதம் இருக்கா என்று பாருங்கோ, ஸார்!" என்று ஏமாற்றமான குரலில் கூறினாள் லலிதா.

போஸ்ட் மாஸ்டர் எல்லாத் தபால்களையும் பார்த்த பிறகு கடைசியாக அடியில் இருந்த கடிதத்தைப் பார்த்து, "ஆகா! இதோ இருக்கு உன் தபால்! எல்லாவற்றுக்கும் அடியிலே போய் உட்கார்ந்திருக்கு!" என்று சொல்லி விட்டு எடுத்துக் கொடுத்தார்.




லலிதா ஆவலோடு அக்கடிதத்தை வாங்கிக்கொண்டு வாசற்பக்கம் குதித்தோடினாள். தபாலாபீசின் வாசலிலேயே உறையை உடைத்து உள்ளே இருந்த கடிதத்தை எடுத்துப் படித்தாள். அந்தக் கடிதத்தில் பின்வருமாறு எழுதி யிருந்தது:—

தாதர், பம்பாய்
14 — 1 — 1934

என் பிரியமுள்ள உயிருக்கு உயிரான தோழி லலிதாவுக்கு அத்தங்காள் சீதா அன்புடன் எழுதியது.

போன ஞாயிற்றுக்கிழமை நான் எழுதிய கடிதம் உனக்குக் கிடைத்திருக்கும். அதை எழுதும்போது மிகவும் சந்தோஷமா யிருந்தேன். வரிந்து வரிந்து நாலுபக்கம் எழுதித் தள்ளினேன். நான் எழுதும்போது அம்மா வந்து பார்த்துவிட்டு, 'சீதா! இவ்வளவு நீளமாய்க் கடிதம் எழுதுவதற்கு அப்படி என்னதான் சமாசாரம் இருக்கும்?' என்று கேட்டாள். 'அம்மா! நாலு பக்கம் எழுதியும் இன்னும் சமாசாரம் முடிய வில்லை. தொடர்கதை மாதிரி அடுத்த வாரம் எழுதப் போகிறேன்' என்றேன். அம்மா என் கன்னத்தில் ஒரு முத்தம் கொடுத்துவிட்டு, 'என் கண்ணே! இப்படியே நீயும் லலிதாவும் உங்களுடைய ஆயுள் முழுவதும் சிநேகமா யிருங்கள்!' என்றாள். அப்போது அம்மாவின் கண்ணில் கண்ணீர் சுரந்திருப்பதைப் பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டுப் போனேன். 'இது என்ன அம்மா? எதற்காகக் கண்ணீர் விடுகிறீர்கள்?' என்று நானும் வருத்தமாகக் கேட்டேன். 'ஒன்றுமில்லை, சீதா! எனக்கு இந்த உலகில் சிநேகிதிகளே இல்லை. நீயாவது ஒரு நல்ல சிநேகிதியைப் பெற்றிருக்-

கிறாயே என்பதாகச் சந்தோஷப் பட்டேன். வேறொன்றுமில்லை' என்றாள்.

'அது எப்படி அம்மா! சந்தோஷத்தினால் யாராவது அழுவார்களா? கண்ணீர் விடுவார்களா?' என்று மறுபடியும் கேட்டேன். 'எத்தனையோ கதைப் புத்தகங்கள் படிக்கிறாயே சீதா! ஆனந்தக் கண்ணீர் என்று கேட்டதில்லையா?' என்றாள். 'நானும் லலிதாவும் சிநேகமாயிருப்பதில் உனக்கு அவ்வளவு ஆனந்தமா?' என்று கேட்டேன்.

'ஆமாம், சீதா! யார் கண்டார்கள்? எனக்கு ஏதாவது காலத் தலைமை விளைந்த தென்றால் உனக்கு வேறு துணை யார் இருக்கிறார்கள்? லலிதாவின் சிநேகம் உனக்கு ஒரு காலத்தில் மிகவும் உபயோகமாயிருக்கலாம்' என்று சொன்னாள்.

இந்தமாதிரியெல்லாம் அம்மா பேசியது அப்போது எனக்கு ரொம்பவும் ஆச்சரியமாயிருந்தது. ஆனால், அம்மாளினுடைய மனதிற்குள் எங்களுக்கு வரப்போகிற விபத்து எப்படியோ தெரிந்திருந்ததோ, என்னமோ?

லலிதா! நான் மேலே என்னத்தை எழுதுவேன்! சென்ற கடிதம் எழுதிய மறுநாளே அம்மா சுரமாகப் படுத்துக் கொண்டாள். 'சாதாரண சுரம், இரண்டு நாளில் சரியாய்ப் போய்விடும்' என்று அம்மா சொன்னதை நம்பிச் சும்மா இருந்து விட்டோம். மூன்றாம் நாள் அப்பாவுக்கு ஏதோ சந்தேகம் வந்து டாக்டரை அழைத்து வந்தார். டாக்டர் 'டைபாய்டு சுரம்' என்று சொல்லிவிட்டார். 'இந்த அம்மாள் போஷாக்குக் குறைவினால் ரொம்பவும் மெலிந்து போயிருக்கிறாள். இத்தனை நாள் கவனியாமல் இருந்து விட்டீர்களே?' என்று அப்பாவை டாக்டர் கேட்டபோது எனக்குச் 'சுருக்' என்றது. அடிக்கடி அம்மா விரதம் இருந்ததும் பட்டினி கிடந்ததும் அதைப்பற்றி அப்பா கொஞ்சம் கூடக் கவனியாமல் இருந்ததும் ஞாபகம் வந்தது.

லலிதா! அதையெல்லாம் இப்போது எழுதி என்ன பிரயோஜனம்? அம்மாவுக்கு உடம்பு ரொம்ப அதிகமாகி விட்டது. 'கடவுள் அருள் இருந்தால் பிழைப்பாள்!' என்று



அப்பாவிடம் டாக்டர் சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டேன்.

கடவுளின் அருள் இருக்குமா, லலிதா! அல்லது கடவுள் என்னை அநாதையாக விட்டு விட்டு அம்மாவை அவரிடம் அழைத்துக் கொண்டு விடுவாரா?

மாமாவுக்கு (உன் அப்பாவுக்கு) என் அப்பா கடிதம் எழுதியிருக்கிறார். உடனே புறப்பட்டு வரும்படி நீயும் சொல்லு. மாமா வந்தால் ஒருவேளை அம்மா பிழைத்துக் கொண்டாலும் பிழைத்துக் கொள்வாள்.

அடுத்த வாரக் கடிதம் உனக்கு எழுது வேனோ என்னமோ, தெரியாது. எழுதா விட்டால் மன்னித்துக்கொள். கடிதம் எழுதி னாலும் எழுதாவிட்டாலும் எப்போதும் உன் நினைவாகவே இருப்பேன்.

உன் அருமைத் தோழி,
சீதா.

தபால் சாவடித் திண்ணையில் நின்ற படியே மேற்படி கடிதத்தைப் படித்த



லலிதாவின் உள்ளம் உருகிவிட்டது. அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று. விம்மி அழத் தொடங்கினாள்.

விம்மிய சத்தம் தபால் ஆபீஸுக்குள்ளே கேட்டது. போஸ்டு மாஸ்டர் பங்காரு நாயுடு, போஸ்டுமேன் பாலகிருஷ்ணன், ரன்னர் தங்கவேலு ஆகிய மூன்று பேரும் வெளியே ஓடி வந்து பார்த்தார்கள்.

"என்ன, அம்மா! என்ன?" என்று கவலையுடன் கேட்டார்கள். கையில் பிரித்து வைத்திருந்த கடிதத்தைப் பார்த்துவிட்டு, "குழந்தை! கடிதத்தில் ஏதாவது துக்க சமாசாரம் இருக்கிறதா?" என்று கேட்டார்கள்.

"ஆமாம்; பம்பாயிலிருக்கிற என்னுடைய அத்தைக்கு ரொம்ப உடம்பு சரியில்லையாம்!" என்றாள் லலிதா.

"இதற்கு ஏன் அம்மா அழ வேண்டும்? உலகத்தில் எத்தனையோ பேருக்கு உடம்புக்கு வருகிறது. சொஸ்தமாகி விடவில்லையா?" என்றார் போஸ்டு மாஸ்டர். பிறகு போஸ்டு மேனைப் பார்த்து, "பாலகிருஷ்ணா! இந்தக் குழந்தையைக் கிட்டாவய்யரின் வீடு வரையில் கொண்டு போய் விட்டுவிட்டு வா, அப்பா!" என்றார்.

"ஆகட்டும், ஸார்! வா, அம்மா!" என்று சொல்லிக்கொண்டே பாலகிருஷ்ணன் புறப்பட்டான்.

## நாலாம் அத்தியாயம்
# வாசலில் ரகளை

கிட்டாவய்யரின் மனைவி சிறிது நேரம் வாசலில் கால் கடுக்க நின்று லலிதாவை எதிர்பார்த்தாள். பிறகு சற்று நேரம் திண்ணையில் உட்கார்ந்து பார்த்தாள். வீதியோடு யாராவது புருஷர்கள் சென்றால் உடனே எழுந்து ரேழியில் போய் நின்றுகொள்வாள். இரண்டொரு தடவை வீட்டுக்கு உள்ளேயும் போய்விட்டு வந்தாள்.

கடைசியாக, லலிதா கையில் பிரித்த கடிதத்துடனும் கண்ணில் கண்ணீருடனும் துணைக்குப் போஸ்டுமேன்

பாலகிருஷ்ணனுடனும் வருகிறதைப் பார்த்ததும் சரஸ்வதி அம்மாள் மனம் கலங்கிவிட்டாள். பாய்ந்து சென்று குழந்தையைத் தாவிக் கட்டிக் கொண்டு, "அடி பெண்ணே! என்னடி விஷயம்? நான் பயப்பட்டது சரியாய்ப் போய்விட்டதே! ......பால கிருஷ்ணா! குழந்தை ஏன் அழுகிறாள்? தடுக்கி விழுந்துவிட்டாளா?" என்று அலறினாள். மனக் குழப்பத்தினால் அக்கம் பக்கத்து வீட்டு ஆண் பிள்ளைகள் வாசலில் வந்து நிற்பதைக் கூட அவள் கவனிக்கவில்லை.

அம்மா இவ்விதம் கேட்டதும் லலிதாவின் தேம்பல் அதிகமாயிற்று. ஆனால் தபால்கார பாலகிருஷ்ணன், "அதெல்லாம் ஒன்றுமில்லை, அம்மா! பம்பாயிலிருந்து ஏதோ கடிதம் வந்திருக்கு! அதைப் படித்துவிட்டுக் குழந்தை அழுகிறது!" என்றான்.

"இவ்வளவு தானே? கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது, லலிதா? என்னதான் இருந்தாலும் நீ எதற்காக அழவேண்டும்?" என்று சரஸ்வதி அம்மாள் கேட்டாள்.

இதற்கும் லலிதாவிடமிருந்து பதில் வராமல் போகவே சரஸ்வதி அம்மாளுக்குக் கோபம் வந்துவிட்டது. "சீ! அசடே! படைபடைக்கிற வெய்யவில் நான் சொன்னதைக் கேட்காமல் தபால் ஆபீஸுக்கு ஓடினாய். இப்போது எதற்காக அழுகிறாய்? யாராவது செத்துக்கித்துத் தொலைந்துபோய் விட்டார்களா, என்ன? நீ சொல்லாவிட்டால் நானாகப் பார்த்துக் கொள்கிறேன்!" என்று லலிதாவின் கையில் இருந்த கடிதத்தைப் பிடுங்கினாள். இவ்வளவும் வீட்டு வாசற்படிக்கும் வீதி வாசலுக்கும் மத்தியில், திண்ணை நடை பாதையில் நடந்தது.

கொல்லைக் கிணற்றில் விச்ராந்தியாகக் குளித்துவிட்டு அப்போது தான் வீட்டுக் கூடத்துக்கு வந்த கிட்டா வய்யர் வாசலில் நடந்த கலாட்டா சப்தத்தைக் கேட்டுவிட்டு வெளியே வந்தார்.

தான் சொன்னதைக் கேளாமல் லலிதா தபாலாபீசுக்குப் போனதற்காக அவளைத் தம் மனைவி அடிப்பதாக எண்ணிக்கொண்டு, "இந்தா சரசு! குழந்தையை அடிக்க வேண்டுமானால் இப்படித்தானா நாலு பேர் சிரிக்கும்படி தெருவிலே நின்று கொண்டு அடிக்க வேண்டும்? உள்ளே வந்து கதவை இழுத்துத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு குழந்தையை அடித்துக் கொன்று விடு. தெருவிலே வேண்டாம்; உள்ளே வா!" என்றார்.

"நான் ஒன்றும் உங்கள் குழந்தையை அடிக்கவும் இல்லை; கொல்லவும் இல்லை. பெற்று வளர்த்தவளுக்குப் பெண்ணை இரண்டடி அடிக்கக் கூடப் பாத்தியதை இல்லையென்று தான் எனக்குத் தெரியுமே? தபாலாபீசிலிருந்து வரும்போது அழுது கொண்டே வந்தாள். கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாதபடியால் கையில் கொண்டு வந்திருந்த கடிதத்தை வாங்கிப் படிக்கலாம் என்று நினைத்தேன். அதற்குள் நீங்கள் வந்து 'அடிக்கிறாய்' 'கொல்லுகிறாய்' என்கிறீர்கள். நீங்களும் உங்கள் பெண்ணும் எப்படியாவது போங்கள். என் வயிற்றில் அவள் பிறக்கவில்லையென்று நினைத்துக் கொள்கிறேன். அல்லது இவளுக்கு முன்னும் பின்னும் பிறந்த குழந்தைகள் செத்ததுபோல் இவளும் செத்துப் போனதாக நினைத்துக்கொள்கிறேன்!" என்று சரஸ்வதி அம்மாள் உரத்த சத்தம் போட்டுக் கத்திவிட்டு விடுவிடு என்று உள்ளே போனாள். கோடை இடி இடித்து ஆலங்கட்டி மழை பெய்து விட்டதுபோ லிருந்தது.

மனைவியின் கோபத்தைக் கிட்டாவய்யர் சிறிதும் பொருட்படுத்தாதவராய் "பாலகிருஷ்ணா! என்ன சமாசாரம்? குழந்தை எதற்காக அழுகிறாள்?" என்று கேட்டார்.

அவன் விவரத்தைத் தெரிவித்து விடைபெற்றுக் கொண்டு திரும்பத் தபாலாபீஸுக்குப் போனான். ஐயர் வீட்டில் ஒரு டம்ளர் காப்பி சாப்பிடச் சொன்னால் சாப்பிடுவதற்குத் தயாராக அவன் வந்திருந்தான். ஆனால் அங்கு நடந்த ரகளையைப் பார்த்து விட்டு உடனே திரும்பினான்.

தபாலாபீசை அடைந்ததும், "ஸார்! பட்டாமணியம் கிட்டாவய்யர் இவ்வளவு சாதுவாயிருக்கிறாரே? அவருக்கு வாய்த்த சம்சாரம் ரொம்பப்

பொல்லாத அம்மா, ஸார்! சற்று நேரத்துக்குள் எவ்வளவு ரகளை பண்ணிவிட்டாள்!" என்றான்.

"என்னடா பாலகிருஷ்ணா இப்படிச் சொல்கிறாய்? கிட்டாவய்யர் சம்சாரம் பரம சாது வாயிற்றே! இருக்கும் இடமே தெரியாதே! நான் எத்தனையோ தடவை போயிருக்கிறேன், அந்த அம்மாளின் குரலைக்கூடக் கேட்டதில்லையே?" என்றார் நாயுடு.

"உங்கள் துரதிர்ஷ்டம் சார், அது! இன்றைக்கு நீங்கள் வந்திருந்தால் பார்த்திருப்பீர்கள்! அடே அப்பா! தாடகை, சூர்ப்பனகை எல்லாரும் அப்புறந்தான்! மொத்தத்திலே பெண்பிள்ளைகளைக் கட்டிக்கொண்டு மாரடிக்கிறதே கஷ்டந்தான்!" என்றான் பாலகிருஷ்ணன்.

"பாலகிருஷ்ணா! நான் சொல்வதைக் கேள். நீ பிரம்மச்சாரி. அதனால் உனக்கு இந்த விஷயம் தெரியவில்லை. ஒவ்வொரு பெண்பிள்ளையிடத்தும் தாடகையும், சூர்ப்பனகையும் குடிகொண்டிருக்கிறார்கள். அதேமாதிரி லக்ஷ்மியும் சரஸ்வதியும் சீதையும் அருந்ததியும் இருக்கிறார்கள். புருஷன் யாரைக் கூப்பிடுகிறானோ அவர்கள் வெளி வருவார்கள். சூர்ப்பனகையை விரும்பினால் சூர்ப்பனகையும் சீதையை விரும்பினால் சீதையும் வருவார்கள். ஏதாவது பைத்தியக்காரத்தனமான எண்ணம் எண்ணிக் கலியாணம் பண்ணிக் கொள்ளாமல் விருந்து சாப்பாட்டுக்குக் கஷ்டப்படாதே!"

"ஆகக் கூடி, கலியாணம் செய்து கொள்வதென்பது சமையல் செய்து போடுவதற்காக என்றுதானே சொல்கிறீர்கள்! நான் கலியாணம் செய்து கொண்டால் 'லவ் மாரியேஜ்'தான் செய்துகொள்வேன்!" என்று பாலகிருஷ்ணன் சொல்லி விட்டு அப்போது பிரபலமாகியிருந்த ஒரு சினிமாப் பாட்டைச் சீட்டி யடிக்கத் தொடங்கினான்.

இங்கே கிட்டாவய்யர் தம் குழந்தையை அன்புடன் தடவிக் கொடுத்து விட்டு, "லலிதா! ஏன் அழுகிறாய்? கடிதத்தில் அப்படி என்ன எழுதியிருக்கிறது, அம்மா?" என்று கேட்டார். லலிதா விம்மலையும் தேம்பலையும் பிரயத்தனப்பட்டு அடக்கிக் கொண்டு, "அப்பா! அத்தைக்கு உடம்பு ரொம்ப சரிப்படவில்லையாம். சீதா எழுதியிருக்கிறாள். உங்களுக்கும் இதோ கடிதம் வந்திருக்கிறது" என்று சொல்லித் தான் கொண்டு வந்திருந்த இரண்டு கடிதங்களையும் அவரிடம் கொடுத்தாள்.

கிட்டாவய்யர் முதலில் ஒரு கடிதத்தைப் படித்துப் பார்த்தார். உடனே அவருடைய கண்ணிலும் நீர் பெருகத் தொடங்கியது. உள்ளே சென்று சாய்மான நாற்காலியில் சாய்ந்தார்.

சரஸ்வதி அம்மாள் சற்றுநேரத்துக்கெல்லாம் சாந்தமான குரலில், "சாப்பிட வரலாமே!" என்றாள்.

கிட்டாவய்யர் அது காதில் விழாதவர் போல் மௌனமாயிருந்தார்.

"ஏன் கவலையாயிருக்கிறீர்கள்? கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது?" என்று சரஸ்வதி அம்மாள் மீண்டும் கேட்டாள்.

"ராஜத்துக்கு உடம்பு சரிப்படவில்லையாம்" என்றார் கிட்டாவய்யர்.

"உடம்பு சரிப்படாவிட்டால் என்ன? தானே சரியாய்ப் போய்விடுகிறது. இதற்காகச் சாப்பிடாமல் இருக்கப் போகிறீர்களா? வாருங்கள்! குழந்தைகள் சாப்பிட உட்கார்ந்து விட்டார்கள்."

"இல்லை, சரசு! குழந்தைகள் சாப்பிடட்டும். எனக்கு இப்போது சாப்பாடு இறங்காது. ராஜத்துக்கு ரொம்ப உடம்பு சரியில்லையாம், 'டைபாய்டு' சுரமாம். பிழைப்பதே..."

"பிழைப்பதே புனர்ஜன்மந்தான். போன வருஷமும் இப்படித்தான் கடிதம் எழுதியிருந்தார்கள். போய்ப் பார்த்தால் ஒன்றும் இல்லை. உங்களுக்கு நானூறு ஐந்நூறு ரூபாய் செலவு வைப்பதில் அவர்களுக்குத் திருப்தி போலிருக்கிறது."

இதைக் கேட்ட கிட்டாவய்யர் சாய்மான நாற்காலியிலிருந்து கோபமாக எழுந்தார். அப்போது பிரிக்காமல் வைத்திருந்த இன்னொரு கடிதம் கீழே விழுந்தது. (தொடரும்)

# எத்தனை பேரோ!

விந்தன்



நீங்கள் 'கஸ்தூரி பவன'த்துக்குச் சென்றிருந்தால் அங்கே பெரியசாமியையும் சின்னசாமியையும் பார்த்திருக்கலாம். இரவிலும் பகலிலுமாக இருவரும் அந்தப் பங்களாவைக் காவல் காத்து வருபவர்கள். ஒரு வாரம் பெரியசாமி பகலில் காவல் காத்தால், இன்னொரு வாரம் சின்னசாமி இரவில் காவல் காப்பான். இப்படியே இருவரும் அந்தக் கஸ்தூரி பவனத்தை மாறி மாறிக் காவல் காத்து வருவார்கள்.

பகலில் காவல் காப்பவன் காலை ஆறு மணிக்கே பங்களாவுக்கு வந்துவிட வேண்டும். அதற்குப் பிறகு இரவு எட்டு மணிக்குத்தான் அவன் வீட்டுக்குச் செல்லவேண்டும். இரவில் காவல் காப்பதற்காக எட்டு மணிக்கு வருபவன், காலை ஆறு மணிக்குத்தான் வீட்டுக்குச் செல்லவேண்டும். மத்தியில் அவர்கள் இருவரும் அந்தப் பங்களாவின் வாயிலை விட்டு அப்படி இப்படி நகரக்கூடக் கூடாது; நின்றது நின்றபடி நிற்கவேண்டும். இவ்வாறு அவர்கள் ஒரு நாள் இரண்டு நாள் அல்ல; ஒரு மாதம் இரண்டு மாதம் அல்ல; ஒரு வருடம் இரண்டு வருடம் அல்ல; எத்தனையோ நாட்களாக, எத்தனையோ மாதங்களாக, எத்தனையோ வருடங்களாக நின்று வருகிறார்கள்!

அந்தப் பங்களாவில் வேலை பார்க்க வந்தபோது பெரியசாமிக்கு வயது இருபத்திரண்டு; சின்னசாமிக்கு வயது இருபது. இன்று அவர்கள் இருவரும் கிட்டத்தட்ட அறுபதாவது வயதை எட்டிப் பிடித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆயினும் கஸ்தூரி பவனத்தின் வாயிலில் அவர்கள் இன்றுவரை உட்காரவில்லை!

அரிதினும் அரிதான மானிடப் பிறவி எடுத்த அவர்கள் இருவரும், பகலில் வேலை செய்யும் போது இரவில் தூங்குவார்கள்; இரவில் வேலை செய்யும் போது பகலில் தூங்குவார்கள். இதைத் தவிர அவர்கள் வேறொன்றும் அறியார்கள்; அறிவதற்கு வேண்டிய அவகாசமும் அவர்களுக்கு இல்லை!

காலைக் கதிரவனின் பொன்னிறக் கிரணங்களிலோ, மாலைக் கதிரவனின் செந்நிறக் கிரணங்களிலோ அவர்கள் தங்கள் கருத்தைச் செலுத்துவதில்லை; வெண்ணிலவின் தண்ணொளியிலும் அவர்கள் தங்கள் மனதைப் பறி கொடுப்பதில்லை; முடிவில்லாத வானத்தில் தவழ்ந்து விளையாடும் மேகக் கூட்டங்களைக் கண்டோ, சுடர் விட்டு ஒளிரும் நட்சத்திரக் கூட்டத்தைக் கண்டோ அவர்கள் மகிழ்வதில்லை; வானளாவிய மரங்களும் மலைகளும் அவர்களுடைய கவனத்தைக் கவருவதில்லை; அதிகாலையில் கேட்கும் பட்சி ஜாலங்களின் உதய கீதமும், அர்த்தராத்திரியில் கேட்கும் ஆந்தையின் அலறலும், ஓயாத ஒழியாத கடல் அலைகளின் பேரிரைச்சலுங்கூட அவர்கள் காதில் விழுவதில்லை!

"ஹிட்லர் உயிருடன் இருக்கிறாரா, இல்லையா?"—"மூன்றாவது உலக மகா யுத்தம் எப்பொழுது வரும்?"—"உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு மந்திரிமார்கள் இன்னும் எத்தனை அறிக்கைகள் விட வேண்டும், எத்தனை பிரசங்கங்கள் செய்ய வேண்டும்?" — "நகரசுத்தித் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதற்கும், அதிகாரிகள் அவர்களுடைய குடிசைகளைப் பிய்த்து எறிவதற்கும் என்ன சம்பந்தம்?"—"விதவா விவாகம் வேண்டுமென்று புருஷர்கள் என்னதான் கரடியாய்க் கத்தினாலும் பெண்கள் ஏன் மௌனம் சாதிக்கின்றனர்?"—இம்மாதிரி பிரச்னைகளுக்கும் பெரியசாமி - சின்னசாமிக்கும் ரொம்ப ரொம்ப தூரம்!

இவற்றையெல்லாம் பார்க்கும்போது, "கஸ்தூரி பவனத்தைக் காவல் காக்கத்தானா இவர்கள் பிறந்தார்கள்?" என்று நமக்குக் கேட்கத் தோன்றுகிறதல்லவா? அதுகூட அவர்களுக்குத் தோன்றுவதில்லை. இன்னும் சொல்லப் போனால், "நாம் ஏன் பிறந்தோம், எதற்காக உயிர்

வாழ்கிறோம்?'' என்றுகூட அவர்கள் சிந்திப்பதில்லை. அதற்கு வேண்டிய நேரந்தான் அவர்களுக்கு இல்லையோ, அல்லது மனந்தான் இல்லையோ — யார் கண்டார்கள்?

★

கடவுள் எல்லோருக்கும் பொதுவானவர் என்றாலும் அவருடைய கடாட்சத்தை ஒரு சிலர்தான் பெற முடிகிறதல்லவா? அப்படிப் பெற்றவர்களில் வைரவன் செட்டியாரும் ஒருவர். கஸ்தூரி பவனம் அவருடைய சொந்தப் பங்களாதான். இகவாழ்க்கையிலுள்ள சுகங்கள் அத்தனையையும் அனுபவித்து அனுபவித்து அவர் அலுத்துப் போனவர். ஆனால், அதற்காகப் பரலோகம் சென்றுவிடவும் அவர் விரும்பவில்லை. இத்தனைக்கும் இகலோகத்தை விடப் பரலோகம் எத்தனையோ விதத்தில் சிறந்தது என்பதை அவர் அறிந்துதான் இருந்தார். தாம் அறிந்த அந்த உண்மையைப் பிறருக்கு எடுத்துச் சொல்லிக் கொண்டும் வந்தார். ஆனால், அவர் மட்டும் அந்த வழியைப் பின்பற்ற ஏனோ தயங்கினார். இல்லையென்றால் வைர வியாபாரியாயிருந்த அவருக்குப் பரலோகம் செல்ல வழியா தெரியாமலிருந்திருக்கும்?

எந்த விதமான ஆசையும் இல்லாமலிருந்த அவருடைய உள்ளத்தில், சில நாட்களாக ஒரே ஒரு ஆசை மட்டும் கிடந்து தவித்துக் கொண்டிருந்தது. அந்த ஆசை வேறொன்றுமில்லை; தானும் ஒரு மந்திரியாக வேண்டுமென்ற ஆசைதான்! இந்த ஆசைக்குக் காரணம், ஏழைகளுக்குத் தொண்டு செய்ய வேண்டுமென்பதில் தமக்குள்ள ஆர்வந்தான் என்று அவர் சொல்லிக் கொண்டார். இதைத் தவிர அவருடைய ஆசைக்கு வேறொரு காரணமும் இல்லையா என்று சில 'சந்தேகப் பிராணி'கள் ஆராய ஆரம்பித்தார்கள். இத்தகைய 'தேசத் துரோகி'களைப் பார்க்கும் போதெல்லாம் செட்டியாருக்கு ஆத்திரம் பொங்கி வந்ததில் ஆச்சரியமென்ன?

இத்தனைக்கும் வைரவன் செட்டியார் அவசரக்காரர் அல்ல; எந்தக் காரியத்தையும் அவர் ஆர அமர யோசித்துச் செய்பவர். பெரியசாமியையும் சின்னசாமியையும் வேலைக்கு அமர்த்திக் கொள்ளும் விஷயத்தில்கூட அவர் எவ்வளவோ தூரம் யோசித்தார். அவர்கள் ஒவ்வொருவருக்கும் மாதம் பதினைந்து ரூபாய் சம்பளம் என்று தீர்மானம் செய்வதற்கு முன் அவர் ஒரு சின்னக் கணக்கும் போட்டுப் பார்த்தார். அதாவது, அவர்களுக்குப் பதிலாகப் பேஷான ராஜபாளையத்து நாய் ஒன்றை வாங்கி வளர்த்தால் என்ன செலவாகும் என்று எண்ணிப் பார்த்தார். அவ்வாறு எண்ணிப் பார்த்ததில் அந்த நாய்க்கும் மாதம் முப்பது ரூபாய்க்குக் குறையாமல் செலவாகும் என்று தெரிந்தது. அதுமட்டுமில்லை; இவர்களுக்கும் நாய்க்கும் எவ்வளவோ வித்தியாசமும் இருக்குமல்லவா?

நாய்க்கு என்ன தெரியும்? எஜமானைக் கண்டால் வாலைக் குழைக்கவும், அன்னியரைக் கண்டால் குரைக்கவுந்தான் தெரியும். எஜமான் காரில் ஏறும்போதும் இறங்கும்போதும் கதவைத் திறந்துவிட அதற்குத் தெரியுமா? 'ஹாரன்' சத்தம் கேட்டதும் அலறியடித்துக்கொண்டு ஓடி வந்து, பங்களாவின் கேட்டைத் திறந்துவிட அதற்குத் தெரியுமா? 'ஏய்!' என்று கூப்பிட்ட மாத்திரத்தில் ஓடோடியும் வந்து 'ஏன், சாமி!' என்று மரியாதை செலுத்த அதற்குத் தெரியுமா? இன்னும், 'இரவில் தூங்கினாயோ, உன்னை வேலையிலிருந்து நீக்கிவிடுவேன்!' என்றும், 'நின்ற இடத்திலேயே நிற்காமல் போனாயோ, விரட்டி விடுவேன்' என்றும் நாயைப் பயமுறுத்த முடியுமா?—இப்படிப் பல சௌகரியங்களையும் உத்தேசித்துத்தான் அவர் பெரியசாமியையும் சின்னசாமியையும் தமது பங்களாவைக் காவல் காக்க வைத்துக் கொண்டார். "ஏதோ, எசமான் புண்ணியத்திலே கால் வயிற்றுக் கஞ்சியாவது குடிக்கிறோமே!" என்ற திருப்தியுடன் அவர்



களும் அந்த வேலையைச் சந்தோஷமாகச் செய்து வந்தனர். வேறு என்ன திருப்தி அவர்களுக்கு வேண்டிக் கிடக்கிறது!

★

அன்று பெரியசாமிக்குப் பகல் வேலை. அதற்காக வழக்கம்போல் அவன் கையில் கட்டுச் சாதத்துடன் காலை ஆறு மணிக்கே கஸ்தூரி பவனத்துக்கு வந்து விட்டான். மத்தியானம் பன்னிரண்டு மணி வரை கால் கடுக்க நின்றபிறகு அவனுக்கு வயிற்றைப் பசித்தது. ஒரு மரத்தடிக்குச் சென்று கட்டுச் சாதத்தை அவிழ்த்துச் சாப்பிட ஆரம்பித்தான். அதற்குள் அந்தப் பாழாய்ப் போன கார் ஹாரன் சத்தம் அவன் காதில் விழுந்தது. அவ்வளவுதான்; கட்டுச் சாதத்தைக் கீழே விரித்தது விரித்தபடி வைத்து விட்டு அவன் விழுந்தடித்துக் கொண்டு ஓடினான்; பங்களாவின் கேட்டைத் திறந்து விட்டான்; கார் உள்ளே நுழைந்தது. அப்புறம் எஜமான் கீழே இறங்கு வதற்காகக் கதவைத் திறந்துவிட வேண்டாமா? அதற்காக அவன் காரைப் பின் தொடர்ந்து ஓட்டமும் நடையுமாகச் சென்றான்.

இந்தச் சமயத்தில் பெரியசாமியின் சாப்பிடும் கவலையைத் தீர்த்து வைக்க ஒரு காகம் முன்வந்தது. மனிதனைப் போல் கிடைத்ததைத் தானே தின்று விட வேண்டும் என்ற ஆசை காகத்துக் குக் கிடையாதல்லவா? ஆகவே, அது 'சேர வாரும் ஜெகத்திரே!' என்று தன் அண்டை அயலிலிருந்த காகங்களை யெல்லாம் கூவி யழைத்தது. அப்புறம் கேட்க வேண்டுமா? அவன் திரும்பி வருவதற்குள் மரத்தடியிலிருந்த கட்டுச் சாதம் அத்தனையும் காலி!

வெறும் இலையைக் கண்ட பெரிய சாமிக்கு எப்படியிருந்ததோ என்னமோ, அவன் தன் வயிற்றில் ஓங்கி ஓர் அடி அடித்துக் கொண்டு வாசலுக்கு வந்து நின்று விட்டான்!

நேரம் ஆக ஆக அவனுக்குப் பசி அதி கரித்தது. மணி எப்பொழுது எட்டடிக் கப் போகிறது என்று அவன் ஒவ்வொரு நிமிஷத்தையும் ஒவ்வொரு யுகமாகக் கழித்து வந்தான். பொழுது சாய்ந்து தெரு விளக்குகள் ஏற்றப்பட்டதும் அவ னுக்குக் கொஞ்சம் தெம்பு உண்டா யிற்று. "சின்னசாமி இன்னும் கொஞ்ச நேரத்திற்கெல்லாம் வந்து விடுவான்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

"அவன் வந்தால் வருகிறான், வராவிட் டால் போகிறான்!" என்று அவன் தன் பாட்டுக்கு வீட்டுக்குப் போய்விடவும் முடியாது; சின்னசாமி வந்து தன் இரவு வேலையை ஒப்புக் கொண்ட பிறகுதான் போகவேண்டும். இல்லையென்றால் வேலை போய்விடுமே!

களைப்பு மிகுதியால் பெரியசாமிக்குக் கொட்டாவிமேல் கொட்டாவியாக வந்தது. அவன் உள்ளமும் உடலும் சோர்ந்து அடிக்கடி கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். மணி எட்டும் அடித்தது; ஒன்பதும் அடித்தது. பத்தும் அடித்தது; பதினொன்றும் அடித்தது. சின்னசாமியைக் காணவே காணோம்!

"சரி, அவன் செத்துத்தான் தொலைந்திருக்க வேண்டும். இல்லையென்றால் இப்படி லீவு எடுத்துக் கொள்ள அவன் எப்படித் துணிந்திருக்க முடியும்?" என்று பெரியசாமி தனக்குள் தீர்மானித்துக் கொண்டான்.

இந்தத் தீர்மானத்துக்கு வந்ததும் அத்தனை நேரமும் அவனிடம் குடிகொண்டிருந்த பரபரப்பு அவனை விட்டு அகன்று விட்டது. மறு நாள் காலை ஆறு மணியை எதிர்பார்த்துக் கொண்டு அவன் நிம்மதியாக நின்றுவிட்டான்!

★

அன்றிரவு மணி ஒன்று அல்லது இரண்டு இருக்கும். என்றுமில்லாத அதிசயமாக அன்று என்னமோ அவனுடைய கால்கள் அவனுடன் ஒத்துழைக்க மறுத்து விட்டன; வேறு வழியின்றி உட்கார்ந்து விட்டான். அவ்வளவுதான் அவன் கண்கள் அவனுடைய அனுமதியில்லாமலே சிறிது அயர்ந்து விட்டன.

அடுத்த நிமிஷம் அவன் தலையில் யாரோ ஓர் அடி அடித்து, அவனை எழுந்து நிற்கச் செய்ததுபோலிருந்தது. "எசமான்தான் தற்செயலாக வந்து தான் செய்த அநியாயத்தைப் பார்த்து விட்டாரோ!" என்று பயந்து போன பெரியசாமி, "இல்லே, எசமான்......!" என்று நடுங்கும் குரலில் சொல்லிக் கொண்டே எழுந்து நின்றான்.

"பயப்படாதே, அண்ணே! எசமான் இல்லே, திருடன்தான்!" என்றான் அவனுக்கு எதிரே நின்ற ஒருவன்.

இதைக் கேட்டதும் பெரியசாமிக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது. "இவன் என்ன, புதுத் திருடனாயிருக்கிறானே! திருட வருபவன் எங்கேயாவது தூங்கிற காவற்காரனை எழுப்புவதுண்டோ!" என்று எண்ணி அவன் குழம்பினான்.

"என்ன, அண்ணே! என்ன யோசிக்கிறே?" என்றான் திருடன்.

"இல்லை, நீ நிசமாகவே திருடன்தா னுன்னு யோசிக்கிறேன்!" என்றான் பெரியசாமி.

"திருடன்தான், அண்ணே! அதிலே உனக்கு என்ன சந்தேகம்? இந்தத் தள்ளாத வயசிலே உறங்கி விழுந்துகிட்டே காவல் காக்கும் உன்னைக் கண்டதும், எனக்கு 'ஐயோ, பாவம்!'ன்னு இருந்திச்சி. உன்கிட்டே சொல்லாமப் போவானேன்னு, சொல்லிட்டுப் போகலாம்னு எழுப்பினேன். சரி, நான் உள்ளே போய் வரட்டுமா?" என்றான் திருடன்.

இதைக் கேட்டதும் பெரியசாமிக்குக் கோபம் கோபமாக வந்தது. அவன் சற்று நிமிர்ந்து நின்று, "என்ன துணிச்சல்டா, உனக்கு? என்னையே கேட்டுக்கிட்டா உள்ளே நுழையப் பார்க்கிறே?" என்று தன் கையிலிருந்த தடியை ஓங்கினான்.

"டேய், சும்மா இருந்து! உனக்கோ வயசாயிடிச்சி. இன்னும் நீ ஏன் இந்த வேலையைக் கட்டிக்கிட்டு அழுறே? பேசாமயிருந்து நான் சொல்றதைக் கேளு—இன்னும் கொஞ்ச நேரம் பொறுத்துக்கோ; அப்புறம் உனக்கு என்ன வேணுமோ, என்னைக் கேளு; நான் கொடுக்கிறேன். அதை வச்சிக்கிட்டுச் சாகிற காலத்திலாச்சும் நீ கொஞ்சம் சந்தோசமா யிருக்கப் பாரு!—என்ன, எனக்கு உத்தரவுதானே?"

"நல்லாயிருக்குடா, நீ சொல்ற ஞாயம்! இத்தனை நாளா என் உயிரைக் காப்பாத்தி வந்த எசமானுக்கா என்னைத் துரோகம் செய்யச் சொல்றே?"

"என்ன, அண்ணே! நீ கொஞ்சங்கூட விசயம் தெரியாமப் பேசறியே! எசமான் இத்தனை நாளா உன் உசிரை எதுக் காவக் காப்பாத்திக்கிட்டு வந்தாரு? — அவரு வீட்டை நாயாட்டம் காவல் காக்கத்தானே? நாலு பேரைப் போல நீயும் சந்தோசமா வாழுறதுக்கு இல்லையே!"

"டேய், இந்த உபதேசமெல்லாம் எனக்கு வேணாம்! ஒரு காலும் நான் உண்ட வீட்டுக்கு ரெண்டகம் நினைக்க மாட்டேன். நீ மரியாதையா இந்த இடத்தை விட்டுப் போறியா?—இல்லை, கூச்சல் போடட்டுமா?"

"நானும் உன்னை மரியாதையாய்த்தான் கேட்டுக்கிறேன் — பேசாம நீ என்னை உள்ளே விடறியா? — இல்லை, நான் உன் மென்னியைப் பிடிச்சுத் திருகிடட்டுமா?" என்று தன் கைகளைப் பெரியசாமியின் கழுத்துக்கு அருகே கொண்டுபோனான் திருடன்.

"திருகுவேடா, திருகுவே! என்னை என்ன, கிழவன்னு நினைச்சுக்கிட்டே? மரியாதையா போடா, வெளியே!" என்று இரைந்து கத்திக் கொண்டே, அவன் கழுத்தில் கம்பை வைத்து நெட்டித் தள்ளினான் பெரியசாமி.

அவ்வளவுதான்; திருடன் தான் பிழைப்பதற்காக அவன் மென்னியைப் பிடித்துவிட்டான்!

அடுத்த நிமிஷம் "எசமான், எசமான்! திருடன், திருடன்!" என்று 'ஓ' வென்று அலறிக்கொண்டே கீழே விழுந்தான் பெரியசாமி.

அவனுடைய அலறலைக் கேட்டுச் செட்டியார் 'ரிவால்வர்' சகிதம் எழுந்து ஓடி வருவதற்குள் திருடன் ஓடிவிட்டான். அதுமட்டுமில்லை; பெரியசாமியின் உயிரும் அவன் உடலை விட்டு ஓடிவிட்டது!

"இதென்ன, தர்ம சங்கடம்! போயும் போயும் இவன் இங்கேயா விழுந்து சாகவேண்டும்? இவன் உழைத்த உழைப்புக்கு 'எங்களுக்கு ஏதாவது கொடு' என்று இவனுடைய பெண்டாட்டி பிள்ளைகள் வேறு வந்து என்னுடைய கழுத்தை யறுக்கவா?" என்று எண்ணிக் கண்ணீர் வடித்தார் செட்டியார்.

அடுத்த கணம் அவருடைய கவனம் சின்னசாமியின் மீது சென்றது. "அவன் ஏன் இன்றிரவு வேலைக்கு வரவில்லை? அவனும் இவனைப் போல் ஒருவேளை செத்துத் தொலைந்தானோ! — சனியன்கள்! இரண்டு கிழங்களும் ஒரேயடியாய் ஒழிந்து தொலைந்தால் நம்மைப் பிடித்த பீடை விட்ட மாதிரி! —ஆனால், வேறு யாராவது வந்தால் இவர்களைவிட அதிகச் சம்பளம் கேட்பார்களோ, என்



னமோ! அதற்காகத்தானே 'இந்தக் கிழங்களே இருந்துவிட்டுப் போகட்டும்!' என்று இத்தனை நாளும் சும்மா இருந்தேன்!'' என்று அவர் தமக்குள் அலுத்துக் கொண்டார். பிறகு, திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டவர் போல 'விடுவிடு' வென்று ஓடி, போலீஸ் ஸ்டேஷனுக்கு 'டெலிபோன்' செய்தார். 'வைர வியாபாரி வைரவன் செட்டியார்' என்று தெரிந்ததும், அவர்களும் உடனே விழுந்தடித்துக்கொண்டு ஓடி வந்தனர். அடுத்த நிமிஷம் பெரியசாமியின் பிரேதம் வழக்கம்போல் பரிசோதனைக்காக ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைக்கப் பட்டது. புலன் விசாரணையும் சாங்கோபாங்கமாக நடந்தது. எவனு யிருக்கட்டும், செத்துப் போன பிறகாவது அவன் விஷயத்தில் சர்க்கார் விசேஷ கவனம் செலுத்த வேண்டுமோ, இல்லையோ!

★

மறுநாள் காலை ஆறு மணிக்கு, 'எசமான் என்ன சொல்வாரோ, என்னமோ!' என்று நடுங்கிக் கொண்டே சின்னசாமி வந்து சேர்ந்தான். அவனைக் கண்டதும் செட்டியாருக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. "ஏண்டா, நாயே! நேற்றிரவு ஏன் வரவில்லை?'' என்று எரிந்து விழுந்தார்.

"என் பெண்டாட்டியைத் தேள் கொட்டி விட்டதுங்கோ!'' என்று ஆரம்பித்தான் சின்னசாமி.

"சரி, உன் பெண்டாட்டியைத் தேள் கொட்டி விட்டதோ இல்லையோ, பின் ஏன் இன்று வேலைக்கு வந்தாய்? போய் அவளைத் தூக்கி வைத்துக் கொண்டிரு, போ! இங்கே நிற்காதே!''

"எசமான்.........!''

"போடா! நேற்று அவன் திருடனைக் கண்டதுமே கீழே விழுந்து பிராணனை விட்டுவிட்டான்; நீ இருட்டைக் கண்டாலே பிராணனை விட்டுவிடுவாயோ, என்னமோ!—போய்த் தொலை!''

சின்னசாமிக்கு ஒன்றும் புரியவில்லை. அருகிலிருந்த தோட்டக்காரனை ரகசியமாக விசாரித்து விஷயத்தைத் தெரிந்து கொண்டான். "நல்ல வேளை! நேற்று நாம் வராததே ரொம்ப நல்லதாய்ப் போச்சு!'' என்று அவன் தனக்குள் நினைத்து ரொம்பவும் சந்தோஷப்பட்டுக் கொண்டான்!

அதற்குள் செட்டியாரின் ஆத்திரமும் ஒருவாறு அடங்கியது. அவர் குரலும் உச்சஸ்தாயியிலிருந்து கீழ் ஸ்தாயிக்கு இறங்கியது. "ஏண்டா, சின்னசாமி அந்தப் பெரியசாமிக்குப் பெண்டாட்டி பிள்ளை யெல்லாம் இருக்கா, என்ன?'' என்று விசாரித்தார்.

"அதெல்லாம் ஒண்ணு மில்லீங்க; அவன் ஒண்டிக் கட்டைங்க! அது தெரியாமத்தான் நீங்க இத்தனை நாளும் எனக்கும் அவனுக்கும் ஒரே சம்பளம் கொடுத்துக்கிட்டு வந்தீங்க!'' என்று சொல்லிவிட்டு, அவன் மெள்ளத் தலையைச் சொறிந்தான்.

சம்பள உயர்வு கேட்பதற்கு இதைவிட நல்ல சந்தர்ப்பம் அவனுக்கு எங்கே கிடைத்திருக்கப் போகிறது!

ஆனால், செட்டியார் அவன் சந்தர்ப்பமறிந்து எடுத்துக் காட்டிய வித்தியாசத்தைத் தம் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. அவர் அதையா கேட்டார்? "செத்துப் போன பெரியசாமிக்குப் பெண்டாட்டி, பிள்ளை இருக்கிறதா, இல்லையா?'' என்றுதானே கேட்டார்?—"இல்லை'' என்று தெரிந்ததும், "கவலை விட்டது; கடவுள் நம்முடைய பங்கில் இல்லாம லிருப்பாரா!'' என்று தமக்குள் எண்ணி, அவர் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார்.

அடுத்த நிமிஷம் அவருடைய முகம் மலர்ந்தது. "ஏலே, சின்னசாமி! நாளைக்கு நம்ம பெரியசாமிக்குப் பதிலா வேறே ஒரு ஆளைப் பிடித்துக்கொண்டு வருகிறாயா?'' என்று கேட்டார் உற்சாகத்துடன்.

இதைக் கேட்டதும் சின்னசாமிக்கும் கொஞ்சம் உற்சாகம் பிறந்தது. "அதுக்கென்னங்க, நம்ம ஊரிலே ஆளுக்கா பஞ்சம்? வேண்டிய ஆளை நான் இழுத்துக்கிட்டு வரேனுங்க!'' என்றான்.

"சரி, போய் 'கேட்'டண்டை நில்லு!'' என்று சொல்லிவிட்டுச் செட்டியார் உள்ளே போய்விட்டார்.

சின்னசாமி பிழைத்தான்!

பெரியசாமியைப் பற்றி யாரும் கவலைப்படவில்லை; செட்டியாருக்காகவே பிறந்தவன்போல் பிறந்து, செட்டியாருக்காகவே வளர்ந்தவன் போல் வளர்ந்து, செட்டியாருக்காகவே வாழ்ந்தவன்போல் வாழ்ந்து, செட்டியாருக்காகவே மடிந்தவன் போல் மடிந்த அவன் தன்னலமற்ற சேவையின் பெருமையைப் பற்றி யாரும் பேசவில்லை. அப்படிப் பேசுவதற்கு அவன் மட்டுமா இந்த உலகத்தில் அந்த நிலையில் வாழ்ந்து அபூர்வமாகச் செத்துப் போனான்? அவனைப் போல் இன்னும் எத்தனை பேரோ!

# சந்திப்பு

கி. ரா. கோபாலன்

வனமாலி முண்டியடித்துக் கூட்டத்தை மீறிக்கொண்டு எப்படியோ ரயிலில் ஏறிவிட்டார். அவ்வளவு நெருக்கடியிலும் அவர் உட்காருவதற்கு ஓர் இடம் கிடைத்ததற்குக் காரணம் அவருடைய உருவமும் உயரமும்தான். சுமார் ஆறரை அடி உயரம்; அதற்குத் தகுந்த பருமன்; கதர் ஜிப்பா; கதர் சால்வை; தோல் பை— இவைகளெல்லாம் கண்ணியமான மனிதர் என்று சொல்வதற்கு வேண்டிய தற்கால சாதனங்களல்லவா?

வனமாலியின் எதிரில் உட்கார்ந்திருந்த கருத்த மனிதர் வைத்த விழி மாறாமல் வனமாலியையே பார்த்துக் கொண்டிருந்தார். பிறர் தம்மை அப்படி உற்றுப் பார்ப்பதை எண்ணி வனமாலி எப்பொழுதும் கவலைப்பட்டதே கிடையாது. ஏன், பிறர் அப்படித் தம்மை உற்றுப் பார்க்க வேண்டுமென்று அவரே விரும்புவார். இப்படிப் பல மனிதர்களின் கண் பார்வை பட்டுப் பட்டுத்தான் உலகில் பல சாதாரண மனிதர்களெல்லாம் பிரபல மனிதர்களாகி விட்டார்கள் என்பது அவருடைய திடமான அபிப்பிராயம்.



எதிரிலிருந்த மனிதருக்கு வனமாலியுடன் பேசுவதற்குக் கூடக் கொஞ்சம் துணிவு ஏற்பட்டுவிட்டது. "ஸார்! உங்கள் முகத்தைப் பார்த்தால்... கொஞ்சம் ......" என்று இழுத்தார்.

வனமாலி சிரித்துக் கொண்டே, "இருக்கும், இருக்கும். நீங்கள் நினைக்கிறபடி நான் கொஞ்சம் வியாபகமான ஆசாமிதான்!" என்று சொல்லிக் கர்வமும் அலக்ஷியமும் கொண்ட பார்வையைச் சுற்றிலும் வீசினார்.

எதிரிலிருந்த கருத்த மனிதர் தம் யூகம் பலித்து விட்டதாக எண்ணி உற்சாகமாகப் பேசினார்:—"அப்படித்தான் நான் நினைத்தேன். நீங்கள்தானே விழிப்பனூர் பஞ்சாயத்து போர்டிலே கொடியேற்று விழா நடத்திப் பிரசங்கம் செய்தீர்கள் — அப்போதுதான் முதல் தடவையாக உங்கள் பிரசங்கத்தைக் கேட்டேன். எல்லோரும் மேடையிலே ஏறிப் பேசிவிடலாம், ஸார்! ஆனால்..."

இந்த இடத்தில் வனமாலி கொஞ்சம் சிரமப்பட்டு எதிரில் உள்ளவரின் பேச்சை நிறுத்த எண்ணி, "நீங்கள் தவறாக நினைக்கிறீர்கள் — நான் அந்த ஆசாமி யல்ல..." என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

எதிரிலிருந்தவருக்கு இதைக் கேட்டதும் பெரிய ஏமாற்றமாய்த்தானிருந்தது. இருந்தாலும் தம்முடைய மதிப்பைக் குறைத்துக் கொள்ளாமல் பேச ஆரம்பித்தார்:

"எப்படி இருந்தாலும் நீங்கள் ஒரு பிரபல மனிதராய்த்தானிருக்கவேணும்......"

"ஆமாம், ஆமாம். நான் ஒரு பிரபல பத்திரிகையின் ஆசிரியர்!"

"பத்திரிகாசிரியரா! நான் நினைத்ததிலும் தவறில்லை! இல்லாவிட்டால் முகத்தில் இவ்வளவு......சரி அதிருக்கட்டும்; உங்கள் பத்திரிகையின் பெயர்......?"

"தீவட்டி!"

"தீவட்டியா! இது உங்கள்..."

"ஆமாம், என்னுடைய பத்திரிகையின் பெயர்தான்!"

"இப்படி ஒரு பத்திரிகையின் பெயரையே நான் கேள்விப்பட்டதில்லையே! ....அதனால் என்ன? எவ்வளவோ உயர்ந்த பத்திரிகைகளெல்லாம் கண்ணில் படாமலே போய்விடுகின்றன. ... அதிருக்கட்டும், பத்திரிகைக்குத் 'தீவட்டி' என்கிற பேரு ரொம்பப் பொருத்தமாகயிருக்கு, ஸார்! பத்திரிகைக்கு என்ன



"இந்த விலாசத்தில் கண்ட தெரு எந்தப் பக்கம் இருக்கிறதென்று தெரியுமா?"
"அதோ ஒரு போலீஸ்காரர் நிற்கிறார், பாருங்கள்; அவரைக் கேட்டால் தெரியும்!"
"நீரும் ஒரு போலீஸ்காரர்தானே?"
"அடடா! மறந்தே போய்விட்டேனே!"

பெயர் வைக்கலாம்னு திண்டாடுகிற இந்தக் காலத்திலே நீங்கள் உங்களுக்குத் தகுந்தாற் போல ஒரு பெயரைக் கண்டு பிடித்து விட்டீர்களே!"

"பத்திரிகைன்னு அதற்குத் தகுந்தாற் போல ஒரு பெயரைக் கண்டு பிடித்துத் தானே யாகவேண்டியிருக்கிறது?"

"அது மாத்திரமில்லே; பெயரில்லாமலும் பத்திரிகை போட முடிகிறதில்லே, பாருங்கள்! அதிருக்கட்டும், உங்கள் 'தீவட்டி' எல்லாருக்கும் போகிறதில்லையோ?......"

"ஏன், போகாமலென்ன? நம்ம 'தீவட்டி' கடை வாசலில் மற்ற பத்திரிகைகள் மாதிரி தொங்காது. அதனாலே சாதாரண மனுஷ்யர்கள் கண்ணிலே படறது கொஞ்சம் அபூர்வம்!"

"சரிதான், குறிப்பாகச் சில பெரிய மனிதர்களுக்கு மாத்திரம்......!"

"ஊஹூம்.........அதல்ல விஷயம்! பத்திரிகைக் கட்டு கடைக்கு வந்தவுடனே 'தீவட்டி'ன்னுப் போதும்; பறந்தே போய்விடும்!"

"அப்படியா சங்கதி? அடடே! நானும் எங்கெங்கோ சுற்றி ஏதேதோ விஷயங்களெல்லாம் தெரிந்து கொண்டு வருகிறேன். இந்த அதிசயத்தைப் பார்க்கவில்லை, ஸார்! உங்கள் பத்திரிகையிலே ரொம்பப் பெரிய பெரிய மனிதர்களெல்லாம் எழுதுவார்கள் போலிருக்கிறது!"

"அதிலே என்ன சந்தேகம்? 'பிரம்ம லிபி'ன்னு கேள்விப்பட்டிருக்கிறீர்களா?"

"இதைக் கேள்விப்படணுமா, ஸார்? தலையெழுத்து என்று சொல்லுவார்களே, அதுதானே!"

"அடாடா! அதைச் சொல்லவில்லே, ஸார்! நான் பிரபல எழுத்தாளர் 'பிரம்ம லிபி'ன்னு......"

"ஓஹோ, எழுத்தாளரா! அவர் உங்கள் பத்திரிகையில் எழுதுகிறாரோ?"

"ஆமாம், ரொம்ப அருமையான எழுத்து ஸார்! இன்றைக்கெல்லாம் இந்தத் தமிழ் நாட்டிலே அவர் கதையைப் படித்துப் புரிந்து கொள்வது என்றால் எண்ணிப் பிடித்தாற் போல் ஒரு பத்துப் பேராலே தான் முடியும். அதிலும் ஐந்து பேருக்குத் தான் கதையின் ஊர் வயணம் புரியும்."

"அப்படியா? அதிருக்கட்டும், உங்கள் 'பிரம்ம லிபி' மாதிரி 'குமறல்'னு இன்னொரு அபூர்வ எழுத்தாளர் இருக்கிறாரே, அவரை உங்களுக்குத் தெரியுமா?"

"எனக்குத் தெரியாதே!"

"'குமறல்' எழுதுவதைப் புரிந்து கொள்ளத் தமிழ் நாட்டிலே ஒரு ஆசாமி இருந்தாலே அபூர்வம், ஸார்!"

"அவ்வளவு உயர்ந்த எழுத்தாளரா! அது சரி, அந்தக் 'குமறல்' எந்தப் பத்திரிகையில் எழுதுகிறார்?"

"அவர் சாதாரண பத்திரிகைகளிலெல்லாம் எழுதுவதில்லே ......!"

"அதெப்படி முடியும்? பிரம்ம லிபிக்குச் சமானமாக எழுதக்கூடியவராய் இருந்தால் 'தீவட்டி' போன்ற உயர்ந்த பத்திரிகையில்தானே எழுத முடியும்?"

"அவர் 'இருட்'டில் எழுதுகிறார்......"

வனமாலி ஆச்சரியத்துடன், "இருட்டிலா!" என்று கேட்டார்.

"ஆமாம் ஸார், ஆமாம்! 'இருட்'டில் தான் அவர் எழுதுகிறார். ரொம்பப் பிரசித்தமான பத்திரிகை ஸார், இருட்டு!"

"சரிதான், அப்படி ஒரு பத்திரிகை இருப்பதாகத் தப்பித் தவறிக்கூட என் காதில் விழுந்ததில்லையே!"

"விழுந்திருக்காது; சாதாரணமான மனுஷ்யான் காதிலெல்லாம் விழ நியாயமில்லே, அந்தப் பத்திரிகையின் பேரு!"

இந்தச் சமயத்தில் வண்டி ஏதோ ஒரு ஸ்டேஷனில் நின்றது. வனமாலி ஜன்னலை மறைத்துக்கொண்டு நின்ற ஒரு மனிதரைப் பார்த்து, "இது என்ன ஸ்டேஷன்?" என்று கேட்டார்.

அந்த மனிதர் வெளியே எட்டிப் பார்த்து விட்டு, 'உறங்கனூர்' என்றார்.

"ஆடாடா! இங்கேதான் நான் இறங்க வேணும், ஸார்! — அதிருக்கட்டும், நீங்கள் யாருன்னு சொல்லவில்லையே?"

"நானும் உங்களைப் போல......" என்று இழுத்தார் கருத்த மனிதர்.

"என்னைப்போல் என்று சொன்னால்? பத்திரிகாசிரியரா?"

"ஆமாம், அப்படித்தான்! கொஞ்ச நாழிகைக்கு முன்னாலே சொல்லவில்லையா, 'இருட்டு' என்று......"

இதைக் கேட்டதும் போகிற அவசரத்தில் ஸ்தம்பித்து நின்றுவிட்டார் வனமாலி. அவர் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் அப்படி ஸ்தம்பித்து நின்றிருக்கலாம். ஆனால் ரயிலும் அவர் மாதிரி ஸ்தம்பித்து நின்று கொண்டிருக்க முடியுமா? நான் புறப்படப் போகிறேன் என்று ஊதிற்று. வனமாலி முகத்தை அஷ்ட கோணலாக வைத்துக்கொண்டு 'இருட்'டின் ஆசிரியருக்கு ஒரு கும்பிடு போட்டு விட்டு வண்டியைவிட்டு இறங்கிச் சென்றார்.

வெகுநேரமாக ஜன்னலை மறைத்துக் கொண்டு நின்ற மனிதர் வந்து வனமாலி உட்கார்ந்திருந்த இடத்தில் அமர்ந்தார். அவர் ஆவலாகவும் அவசரமாகவும் வந்து உட்கார்ந்த பாவனை 'இருட்டு'ப் பத்திரிகாசிரியரிடம் ஏதோ பேசத் துடிப்பது போல் இருந்தது. அவர் மெதுவாகத் தம் பையிலிருந்த சிறிய வெற்றிலைப் பெட்டியை எடுத்து, "ஸார்! கொஞ்சம் வெற்றிலை போடுகிறீர்களா?" என்றார் உபசாரமாக.

"வெற்றிலையா? எனக்கு அந்தப் பழக்கம் இல்லை" என்று உபசாரமாகவே மறுத்து விட்டு, வேறெங்கோ கவனத்தைச் செலுத்தினார் பத்திரிகாசிரியர்.

"ஸார்! கொஞ்ச நாழிகைக்கு முன்னால் உங்களோடு பேசிக் கொண்டிருந்தார் பாருங்கோ, 'தீவட்டி' ஆசிரியர்—அவர் ரொம்பத் தங்கமான மனிதர்!"

"அவரோடு உங்களுக்கு நெருங்கிய பழக்கமுண்டோ?"

"அப்படி யொன்றும் பார்த்துப் பேசிப் பழக்கமில்லை. இப்போதுதான் உங்கள் இரண்டு பேரையும் சேர்த்து தரிசிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அவருக்கும் எனக்கும் வேறொரு தொடர்பு உண்டு; எழுத்து மூலமாக......"

"எழுத்து மூலமான்னா, ஏதாவது பிராமிசரி நோட்டு......"

"ஊஹூம், அதெல்லாமில்லை! இன்றைக்குத் 'தீவட்டி' தமிழ் நாட்டிலே உன்னதமாகப் பிரகாசிக்கிறது என்றால், அது என்னுடைய கதைகளாலேதான்!"

"அப்படியா?—உங்கள் பேரு......?"

"சொந்தப் பெயரை நான் லக்ஷியம் செய்கிறதில்லை—தக்கிறி பிடிச்ச பேரு! நான் புனைபெயரில்தான் எழுதுகிறேன்."

"தங்கள் புனைபெயர் என்னவோ?"

"பிரம்ம லிபி!"

'பிரம்ம லிபி' என்ற பெயரைக் கேட்டதும் 'இருட்டு' ஆசிரியரின் மண்டையில் இரும்புத் தடியால் யாரோ அடித்தது போலிருந்தது.

"கொஞ்ச நாழிகைக்கு முன்னால் தீவட்டி ஆசிரியர் என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தாரே......"

"ஆமாம், அதே ஆசாமிதான் நான்..."

"சரிதான்..."

"ஸார்! நான் படிப்பை முடித்து விட்டு என்று வெளியே வந்தேனோ, அன்று



"ஏன் ஸார், திடீரென்று முகத்தை மூடிக்கொண்டு தவிக்கிறீர்? உடம்புக்கு ஏதேனும் ......"

"அதெல்லாம் ஒன்றுமில்லை, ஸார்! இந்தக் கிழ அம்மான் பக்கலில் நின்று கொண்டு வருவதைப் பார்க்கச் சகிக்கவில்லை!"

பிடித்த எழுத்துப் பைத்தியம் இன்னும் விடவில்லை, ஸார்! அதிலிருந்து இருபது வருஷமாகக் கதை எழுதிக் கொண்டு வருகிறேன். எத்தனையோ பத்திரிகை யிருக்கிறதே, ஏதாவது ஒரு பத்திரிகை என் கதையைத் துணிந்து பிரசுரிக்க வேணுமே? — கிடையாது! முதன் முதலில் 'தீவட்டி'ப் பத்திரிகாசிரியர் தான் ஸார் துணிந்து என் கதையைப் பிரசுரித்தார். அதற்குப் பிறகுதான் .........”

“அவருக்குத்தான் அந்தத் துணிச்சல் என்று நினைக்காதீர்கள்; எனக்கும் உண்டு. 'இருட்'டிலே 'குளறல்'னு ஒரு அற்புதமான எழுத்தாளர் எழுதுகிறார், உங்கள் எழுத்தாவது பத்துப் பேருக்குப் புரியும்னு 'தீவட்டி' ஆசிரியர் சொன்னார். ஆனால் 'குளறல்' எழுதும் கதை ஒருவருக் குக்கூடப் புரியாது, ஸார்!”

“ஸார்! நீங்கள் படபடப்பாகப் பேசிக் கொண்டு போகிறீர்கள்! உங்களுக்கு அந்தக் 'குளறல்' யாருன்னு தெரியுமோ?”

“யாராய் இருந்தால் எனக்கு என்ன ஸார்? உயர்ந்த எழுத்தை வரவேற்க வேண்டியதுதானே? 'தீவட்டி' உலகத் திற்கு நன்மை செய்வதைவிட 'இருட்டு' எவ்வளவோ நன்மை செய்யும்......”

“ஸார்! நீங்கள் ரொம்ப ஆத்திரத் தோடு பேசுகிறீர்கள். 'குளறல்' என்கிறவர் யாருன்னு சொல்ல நினைத்தேன்......”

“யாராய் இருந்தால் என்ன ஸார்! நான் ஆசாமிதெரிந்து இடம் கொடுக்கிற ஆசிரிய னல்ல. நல்ல எழுத்துக்கு எப்பொழுதும் 'இருட்'டில் இடமுண்டு. 'குளறல்' சாதாரண ஆசாமியல்ல, மஹா மேதை...!”

“அந்த மேதையைத் தெரிந்துகொள்ளக் கூடிய சந்தர்ப்பம் கிடைத்தால் நீங்கள் வரவேற்க மாட்டீர்களா?”

“ஏன், வரவேற்க மாட்டேன்? சந் தோஷத்தோடு வரவேற்பேன்!”

“'குளறல்' என்பவர் சாக்ஷாத் 'பிரம்ம லிபி'தான்!”

'இருட்டு' ஆசிரியரைப் பேயறைந்தது போலிருந்தது. “அப்படின்னு நீங்களே...” என்று தடுமாறினார்.

“ஆமாம், நானேதான் 'தீவட்டி'யில் 'பிரம்ம லிபி' என்றும், 'இருட்டி'லே 'குளறல்' என்றும் எழுதுகிற மனிதர்! என் சொந்தப் பெயர் ஞானவிலாசம்!” என்று சொல்லி, இருபது வருஷமாக வெற் றிலைக் காவி ஏறி அழுகு படிந்திருந்த பற்களை அந்த மனிதர் காட்டினார்!

---

# வந்தனம் எதற்கு?



# காலக்ஷேபம்

## பிடிபட்டது யார்?

ஒரு போலீஸ் கான்ஸ்டபிளுக்கு வெகு நாட்களாக ஒரு பிரமாதமான கேஸைக் கண்டு பிடித்து அதில் நல்ல பெயர் எடுக்க வேண்டும் என்று ஆசை. அதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது.

கான்ஸ்டபிள் (டெலிபோனில்):—ஹலோ, இன்ஸ்பெக்டர் ஸார் இருக்கிறாரா?

பதில்:—ஆமாம், நான் இன்ஸ்பெக்டர்தான் பேசுகிறேன். நீங்கள் யார்?

கான்ஸ்டபிள்:—நான்தான் நெ. 323 பேசுகிறேன். ஒருவர் வீட்டில் திருடர்கள் புகுந்து அவரைத் தாக்கிவிட்டுச் சரியானபடி கொள்ளையடித்துக்கொண்டு போய்விட்டார்கள். அவர்களில் ஒருவரைப் பிடித்து விட்டேன்..........

இன்ஸ்பெக்டர்:—யாரைப் பிடித்திருக்கிறாய்?

கான்ஸ்டபிள்:—அந்த வீட்டுக்குச் சொந்தக்காரரைத்தான்!

★

## பேஷ்!

ஒரு வீட்டில் திருடன் நுழைந்து மெதுவாக அங்கிருக்கும் பொருள்களை யெல்லாம் துருவிப் பார்த்தான். அப்பொழுது விழித்துக் கொண்ட வீட்டுக்காரர் திருடனைப் பார்த்து விட்டார். உடனே தம் கைத் துப்பாக்கியை எடுத்து அவன் மார்புக்கு நேராக நீட்டினார். திருடன் ஒரு வினாடி நடுங்கி விட்டான். அந்தச் சமயம் ஒரு குழந்தைக் குரல் பக்கத்தி லிருந்து பின்வருமாறு கூறியது:—

"அப்பா, என்னுடைய தீபாவளித் துப்பாக்கியை வைத்துக் கொண்டு அங்கே என்ன அப்பா, செய்கிறாய்!"

★

## நல்ல தையல்!

ஒருவர் (கோபத்துடன்):—என்ன அப்பா, உன்னிடம் கோட்டு, ஷர்ட்டு எல்லாம் தைக்கக் கொடுத்தால் ரொம்பத் திருப்திகரமாகத் தைத்துக் கொடுப்பாய் என்று கேள்விப்பட்டு வந்தால், இவ்வளவு மோசமாகத் தைத்துக் கொடுத்திருக்கிறாயே?

தையற்காரன்:—ஏன் ஸார்! இப்பொழுது என்ன கெட்டு விட்டது? ஏன் இவ்வளவு கோபித்துக் கொள்ளுகிறீர்கள்? நான் தைத்துக் கொடுத்த கோட்டு சரியாயில்லையா?

ஒருவர்:—கோட்டு வந்ததும் அதைப் போட்டுப் பார்த்தேன். உடனே அதன் முதுகுப்புறத்தி லிருந்த தையல் தானாகவே பிரிந்து விட்டது!

தையற்காரன்:—பார்த்தீர்களா? இதிலிருந்தே போத்தான்களை எவ்வளவு பலமாகத் தைத்திருக்கிறேன் என்று தெரியவில்லையா!

## அவசியமில்லையா?

பிரயாணி (ஸ்டேஷன் மாஸ்டரைப் பார்த்துக் கோபத்துடன்):—ஸார், என்னத்துக்காக ரயில்வே கால அட்டவணையைச் சுவரில் மாட்டியிருக்கிறீர்கள்? அந்த அட்டவணையில் குறித்திருக்கும் மணிப்படி ஒரு ரயிலும் வரக் காணோமே!

ஸ்டேஷன் மாஸ்டர்:—ஸார், நீங்கள் கோபத்தினால் யோசிக்காமல் பேசுகிறீர்கள். அந்த அட்டவணையைப் பார்த்ததனால்தானே உங்களுக்கு இதைத் தெரிந்துகொள்ள முடிந்தது?

★

## சரியாய்ப் போயிற்று!

"ஸார், இங்கே இந்த கம்பெரிக்குள்ளே யாரும் சிகரெட் பிடிக்கக்கூடாது. இது உங்களுக்குத் தெரியாதா? நீங்கள் அபராதம் கொடுக்கவேண்டும்!"

"ஓகோ, அப்படியா? மன்னித்துக் கொள்ளுங்கள். எவ்வளவு அபராதம் கொடுக்க வேண்டும்?"

"அரை ரூபாய் கொடுக்க வேண்டும்!"

"சரி, இந்தாருங்கள். என்னிடம் ஒரு ரூபாயாக இருக்கிறது. பாக்கிச் சில்லறையைக் கொடுங்கள்."

"என்னிடம் சில்லறையில்லையே! என்ன செய்யட்டும்?"

"சரி, பாக்கிச் சில்லறை வேண்டாம். அதற்குப் பதிலாக இன்னொரு சிகரெட் பிடித்து விடுகிறேன்!"

★

## இரண்டு வாரந்தானே!

கடன் கொடுத்த பட்டாணியன்:— ஐயா வீட்டில் இருக்கிறாரா, அம்மா?

வீட்டு எஜமானி:— இல்லை; ஊருக்குப் போயிருக்கிறார். அவர் திரும்பி வருவதற்கு இரண்டு வாரமாவது ஆகும். போய் வா!



பட்டாணியன்:— இரண்டு வாரந்தானே? அவர் திரும்பி வரும்வரை நான் இங்கேயே உட்கார்ந்திருக்கிறேன்!

# கூண்டோடு கைலாசம்!

— ரா. ஸ்ரீ —



"ஸார், தபால்!" என்று கூவிய தபால்காரன் கடிதத்தை வீசி யெறிந்து விட்டுப் போனான். அதைப் பிரித்துப் படித்துவிட்டு, "சுந்தரி! சுந்தரி!" என்று கூப்பிட்டான் சுந்தரராமன்.

"ஏன்? என்ன அவ்வளவு அவசரம்?" என்று கூறிக்கொண்டே சமையல் அறையிலிருந்து வந்தாள் அவனுடைய சஹதர்மிணி.

"இந்தா! அத்தையிடமிருந்து வந்திருக்கிறது, பார்!" என்று சொல்லிக் கொண்டே சுந்தரராமன் கடிதத்தை அவளிடம் நீட்டினான்.

கடிதத்தைப் படித்து முடித்த சுந்தரியின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. "ஹும்! உங்கள் அத்தைக்கு வேறு வேலை யில்லை. இந்த ஊர் என்ன சொர்க்கம் என்று நினைத்துக் கொண்டார்களோ? நீங்கள்பாட்டுக்கு ஆபீஸிற்குப் போய்விடுகிறீர்கள். அவரை வைத்துக்கொண்டு படும் கஷ்டமெல்லாம் எனக்கல்லவா தெரியும்?" என்று படபடவென்று பொழிந்தாள் சுந்தரி.

உண்மையில் சுந்தரராமனுக்கும் அவன் அத்தை பாகீரதி அம்மாள் தன் வீட்டில் வந்து இருப்பதால் நேரிடும் கஷ்டங்கள் யாவும் நன்றாய்த் தெரிந்திருந்தன. பாகீரதியின் சொந்த ஊர் மதுரை. சுந்தரராமனைத் தவிர அவளுக்கு நெருங்கிய உறவினர்கள் யாரும் இல்லாததால் அவள் அடிக்கடி அவன் வீட்டிற்கு விஜயம் செய்து ஒரு மாதம் அல்லது இரண்டு மாதம் தங்கிவிட்டுப் போவாள். அப்பொழுதெல்லாம் சுந்தரியின் பாடு மிகவும் கஷ்டமாய்விடும். பாகீரதி அம்மாள் பழங்காலப் பழக்கங்களில் வழக்கப்பட்டவளாதலால் சுந்தரியினால் அவளைச் சிசுருஷைகளின் மூலம் திருப்தி செய்விக்க முடியாமலிருந்தது. அவள் செய்யும் காரியம் ஒவ்வொன்றிலும் ஏதாவது குறை கண்டு பிடிப்பதும், முணுமுணுப்பதுமே அவள் நித்திய வழக்கமாயிருந்தது. பாகீரதி அத்தை இருக்கும் பொழுதெல்லாம் சுந்தரிக்குக் காலைமுதல் இரவு பத்து மணி வரை வேலை இடுப்பு ஒடிந்துவிடும். தன்னுடைய கணவனைக் கவனிக்கக்கூட அவளுக்கு நேரமிருக்காது. இத்தனை செய்தும் அவளிடமிருந்து அவள் பெற்றதெல்லாம் திட்டும் வசவும் தூஷணையுமே!

ஆகவே, பாகீரதி அம்மாள் தன் வீட்டுக்கு வருவதாக எழுதியிருந்ததைக் கண்டதும் சுந்தரியின் பொறுமை எல்லை கடந்ததில் ஆச்சரியமில்லை.

"சுந்தரி! உன் கஷ்டங்கள் எல்லாம் எனக்கு நன்றாய்த் தெரியும். அவள் இங்கு வருவதில் எனக்கும் கொஞ்சம்கூட இஷ்டமில்லை. என்ன செய்வது? அவள் சொத்தையெல்லாம் எங்களுக்குக் கொடுக்கிறேன் என்று சொல்கிறாளே என்று பார்க்கிறேன். அதனால்தான் வந்து இருந்துவிட்டுப் போகட்டுமே என்று சில சமயம் தோன்றுகிறது" என்றான் சுந்தரராமன்.

"அப்படியானால் நீங்களே அவளுக்குக் காப்பி, டிபன், சாப்பாடு எல்லாம் பண்ணிப் போடுங்கள். நான் அம்மாவிடம் போகிறேன்!" என்றாள் சுந்தரி.

சுந்தரராமன் பதிலுக்குப் புன்னகை புரிந்தான். "சுந்தரி! அத்தையின் சமாசாரம் உனக்கு நன்றாய்த் தெரியும். இந்த தடவை அவள் இங்கு வருவது எனக்குக் கொஞ்சமும் இஷ்டமில்லை. ஆகையால் நாம் அவளை ஒரு தந்திரத்தால் இங்கே வராமல் செய்ய வேண்டும். நான் சொல்கிறபடி நீ அவளுக்கு ஒரு கடிதம் எழுது!" என்று சொன்னான்.

அவன் சொன்னபடியே சுந்தரி கீழ்க்கண்டவாறு ஒரு கடிதம் எழுதினாள்:—

சோனபுரம்

"பாகீரதி அத்தை அவர்களுக்கு, சுந்தரியின் அனேக கோடி நமஸ்காரம். நீங்கள் 'அவ'ருக்கு எழுதிய கடிதம் கிடைத்தது. அவருக்கு ஆபீஸில் வேலை ஜாஸ்தியாயிருப்பதால் என்னை எழுதச் சொன்னார். நீங்கள் இந்த ஊருக்கு வரவேண்டும் என்று எழுதியிருப்பதைப் படிப்பதற்கு மிகவும் சந்தோஷம். ஆனால் இந்த ஊர் முன்போல் சௌகரியமாயில்லை. ஒன்றும் கிடைக்க

மாட்டேனென்கிறது. எல்லா சாமான்களுக்கும் ஒரே பஞ்சமா யிருக்கிறது. அரிசியே கிடைப்பதில்லை. தாங்கள் சாதம் சாப்பிட்டு இரண்டு மாதம் ஆகிறது. பால் தயிர் ஒன்றும் கிடைப்பதில்லை. காப்பிக்குச் சர்க்கரையே இல்லை. தவிரவும் ஊரில் காலரா. பிளேக் முதலிய வியாதிகள் ஜாஸ்தியா யிருக்கின்றன. எங்கள் தெருவில்கூட இரண்டு பேருக்குக் காலரா கண்டு இறந்து விட்டார்கள். வேறு விசேஷமில்லை. உங்கள் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

இப்படிக்கு,

சுந்தரி.''

கடிதத்தைத் தானே போய்த் தபாலில் போட்டுவிட்டு வந்ததும்தான் சுந்தரிக்கு மனம் நிம்மதியாயிற்று. சாதாரணமாய் பாகீரதி அம்மாளுக்குக் காலரா, பிளேக் என்றால் அசாத்திய பயம். ஆகையால் கட்டாயமாய் வரமாட்டாள் என்று நினைத்தபோது சுந்தரிக்கு அவளையறியாமல் சிரிப்பு வந்தது.

அன்று சாயங்காலம் ஆபீஸிலிருந்து வந்த கணவனிடம் தான் எழுதியதைச் சொன்னதும் அவனும் விழுந்து விழுந்து சிரித்தான். "அவள் ஏன் வருகிறாள்? நீதான் அவளை ஒரேயடியாய்ப் பயமுறுத்தி விட்டாயே!'' என்று கூறிக் கொண்டே அவன் அல்வாத் துண்டை விழுங்கினான். தங்களுடைய வெற்றியைக் கொண்டாடுவதற்கு இருவரும் அன்று இரவு சினிமாவுக்குப் போனார்கள்.

இந்தச் சம்பவங்கள் நடந்த மூன்றாம் நாள் காலை வழக்கம்போல் சுந்தரராமன் ஆபீசுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தான். வாசலில் குதிரை வண்டி யொன்று வந்து நின்ற சத்தம் கேட்டுத் திடுக்கிட்ட சுந்தர ராமனும் சுந்தரியும் வாசல் திண்ணைக்கு விரைந்து வந்தார்கள். வண்டியி லிருந்து மூட்டை முடிச்சுகளுடன் பாகீரதி அம்மாள் மெதுவாக இறங்கிக் கொண்டிருந்தாள்!

''வாங்கோ அத்தை!'' என்று அசடு வழிய இருவரும் கூறினார்கள்.

"சுந்தரி! உன் கடிதத்தைப் பார்த்ததும் எனக்கு எப்படி இருந்தது தெரியுமா? நீங்கள் இருவரும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும்போது எனக்கு அங்கே என்ன சுகம் வேண்டியிருக்கிறது? என் மனசு கேட்கவே யில்லை. உங்கள் இருவருக்கும் வரும் காலரா, பிளேக் எனக்கும் வந்து நானும் கூண்டோடு கைலாசம் போய்விடலா மென்றுதான் உடனே புறப்பட்டு வந்தேன்!'' என்று சொல்லிக் கொண்டே பாகீரதி அத்தை உள்ளே நுழைந்தாள்.

தம்பதிகள் இருவரும் ஒருவரை யொருவர் பார்த்து விழித்தார்கள்!

# வீடு கிடைக்குமா?

இ. ரங்கராஜன்

அன்று ஞாயிற்றுக்கிழமை. எனக்கு விடுமுறை நாள். எப்பொழுதும்போல் பங்கீடு அரிசி, ரேஷன் விறகு, மண்ணெண்ணெய் முதலிய சில்லறை சாமான்களைக் 'கியூ' வரிசையில் நின்று வாங்கிக்கொண்டு நான் வீட்டுக்கு வந்தபோது மணி பன்னிரண்டு. ஸ்நானம், சாப்பாடு முதலியவைகளையும் ஒரு மாதிரியாக முடித்துக்கொண்டு, படை பதைக்கும் வெய்யிலில் சிரமத்தையும், தூக்கத்தையும் பாராமல் வீடுதேடு படலமாகிய மகா யக்ஞத்தைச் சென்ற வாரம் விட்ட இடத்திலிருந்து மீண்டும் ஆரம்பம் செய்யத் தொடங்கினேன்.

என்னைப் பொறுத்த வரையில்—பிறருக்கு எப்படியோ தெரியாது—கும்பகோணத்தில் வீட்டின் சொந்தக்காரர்களோடு சேர்ந்தாற்போல் இரண்டு வருஷங்கள் குடியிருந்து விடுவது என்பது ஒரு செப்பிடு வித்தையாகத்தான் இருக்கிறது. அந்த வித்தையை நான் கடந்த மூன்று வருஷமாகச் செய்து வந்தேன். மூன்றும் வருஷ முடிவில் நெருக்கடி ஏற்பட்டுவிட்டது. எவ்வளவு முயன்றும், ஒரு மாசத்துக்குமேல் அந்த வீட்டில் இருப்பது என்பது இயலாத காரியம் என்ற நிலைமைக்கு வந்துவிட்டது.

அடுத்த தெருவில் என் நண்பன் நாராயணன் வசித்து வந்தான். அவனுக்குக் கும்பகோணத்தில் எல்லோரைப் பற்றியும் எல்லா வீடுகளைப் பற்றியும் தெரியும். இப்போது எந்த வீடு காலியாக இருக்கிறது; காலி இல்லாவிட்டால் எப்பொழுது காலியாகும் முதலிய விஷயங்களைத் தெரிந்து வைத்திருப்பான். அதுமட்டுமன்றி ஆறு மாதத்தில் காலியாகும் வீடு, மூன்று மாதத்தில் காலியாகும் வீடு முதலிய புள்ளி விவரங்களெல்லாம் வேறு அவனுக்குத் தெரியும். ஆகவே அவனைப் பிடித்தால் ஏதாவது வழி பிறக்கும் என்று அவன் வீட்டுக்குப் போனேன். நல்ல வேளையாக அவனும் வீட்டில் இருந்தான். "வா, ரகு! என்ன இந்த வெய்யிலில் வந்தாய்? இப்படி இந்தச் சாய்மான காற்காலியில் உட்கார்" என்று சொல்லி என்னை வரவேற்றான்.

"வரவேற்பு இருக்கட்டும்! எனக்கு உன்னால் அவசரமாக ஒரு காரியம் ஆக வேண்டும்" என்றேன்.

"என்னடா அப்படித் தலை போகிற காரியம்?"

"தலை போவதற்கு மேல்! இரண்டு நாளைக்குள் வேறு வீடு மாற்றியாக வேண்டும்."

"நீ இந்த ஊருக்கு வந்து முழுசாக நாலு வருஷம் ஆகவில்லை. அதற்குள் எத்தனை வீடுகள் மாற்றுவாய்? நீ இப்பொழுது பச்சையப்ப முதலியார் தெருவில்தானே இருக்கிறாய்?"

"பச்சையப்ப முதலியார் தெருவை விட்டுக் கிளம்பி இரண்டு வருஷமாச்சே! மடத்துத் தெருவில் அல்லவா இப்போது இருக்கிறேன்!"

"மடத்துத் தெருவுக்கா வந்து விட்டாய்? நீ என்னிடம் சொல்லவில்லையே!"

"ஆமாம். நான் அங்கே வந்து இரண்டு வருஷங்களுக்குமேலே ஆகிறது. என்னவோ, ஸ்திரீகளுக்குள் ஒத்துக்கொள்ளவில்லை. வேறு வீடு பார்க்க வேண்டும். போன வாரம் பக்தபுரி அக்ரகாரத்தில் ஒரு வீடு காலியாகப் போகிறது என்று சொன்னார்கள். இதற்குள் குடிவந்து விட்டார்களோ என்னமோ?"

"எனக்கும் அப்படித்தான் கேள்வி. நல்ல வீடு. வீட்டுக்காரர் தங்கமானவர். இதுவரை குடிவராவிட்டால் உன் அதிர்ஷ்டந்தான். அவருடைய மனைவியும் நல்ல மாதிரி" என்றான் நண்பன்.

"சரி, புறப்படு!" என்றேன்.

"இந்த வெய்யிலில் போவானேன்? இரு, டிபன் சாப்பிட்டுவிட்டுப் போவோம். நீயும் சற்றுச் சிரம பரிகாரம் செய்துகொள்"

எனக்கும் கண்ணைச் சுற்றியது. அப்படியே காற்காலியில் கண்ணயர்ந்தேன். அதிக நேரம் தூங்கியிருக்கமாட்டேன். காரியம் இருக்கும்போது தூக்கந்தான் வருமா? நானும் நாராயணனும் கிளம்பினோம். பக்தபுரி அக்ரகாரத்துக்



குப் போனோம். வாசற் கதவு மூடியிருந்தது. கதவைத் தட்டினேன்.

"ஸார், வீட்டில் யாராவது இருக்கிறீர்களா?" என்றேன்.

"யார், இதோ வந்துவிட்டேன். கொஞ்சம் பொறுங்கள்" என்று உள்ளேயிருந்து ஒரு குரல் வந்தது. அந்தக் குரலில்தான் என்ன குளுமை! ஒரு பெரியவர் வெளியே வந்தார். ஆஜானுபாகுவான அவருடைய தோற்றப் பொலிவு என்னை மிகவும் வசீகரித்தது.

"இந்த வீட்டில் வாடகைக்கு இடம் இருப்பதாகச் சொன்னார்கள். பார்த்துவிட்டுப் போக வந்தோம்."

"ஆமாம், உள்ளே வாருங்கள்" என்று சொல்லி அவர் எங்களை அழைத்துக்கொண்டு உள்ளே போனார்.

"பின் கட்டில்தானே இடம் காலி இருக்கிறது?"

"நன்றாய்ச் சொன்னீர்கள்! இவ்வளவு பெரிய வீட்டில் முன்கட்டில் அறைகளுக்கா பஞ்சம் வந்துவிட்டது? இந்தக் கூடம். அதோ சமையல் அறை. அதற்கு நேராகப் படுக்கை அறை. பின் பக்கம் 'பாத் ரூம்'. மாடியில் ஒரு அறை."

"எனக்கு முழுவீடு தேவை இல்லையே!"

"உங்களுக்கு யார் ஸார் முழு வீட்டையும் கொடுப்பதாகச் சொன்னார்கள்? இந்த வீடு மூன்று கட்டு வீடு. நடுக் கட்டில் இதே மாதிரியாக அறைகள் இருக்கின்றன. அங்கே நாங்கள் வசிக்கிறோம்" என்றார்.

"இடம் நன்றாகத்தான் இருக்கிறது. மனசுக்குப் பிடித்துவிட்டது" என்றேன்.

"தெற்குப் பார்த்த வீடாகத்தான் கட்டியிருக்கிறேன். சமையல் அறையில் வெப்பமே தோன்றாது. 'ஜிலுஜிலு' என்று இருக்கும். ஹாலில் மேஜைமீது 'வெயிட்' வைக்கா விட்டால், சாமான்களைக் காற்று அடித்துக்கொண்டு போய்விடும். என் வீட்டைப் பற்றி நானே சொல்லிக்கொள்ளக்கூடாது. உங்கள் அபிப்பிராயம் எப்படியோ?"

"இடம் எனக்குப் பிடித்துவிட்டது. என் பெயர் ரகுராமன். தாலூக்காக் கச்சேரியில் வேலை. மாதம் 90 ரூபாய் சம்பளம். முதல் தேதியன்று வாடகை கொடுத்து விடுவேன். நானும் என் மனைவியும் இரண்டு குழந்தைகளும்தான். வேறு யாரும்......"

"ஸார், வாயை மூடிக்கொள்ளுங்கள்! எனக்கு வேண்டியது மாத வாடகைதான். நீங்கள் எத்தனை பேர் இருந்தாலும் எங்களுக்குச் சம்மதந்தான். நீங்கள் வாடகை கொடுக்கும் வரை நீங்கள் குடியிருக்கும் பாகம் உங்கள் சொந்த இடம் மாதிரி."

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. "ரொம்ப சந்தோஷம். வாடகை எவ்வளவு?" என்றேன்.

"வாடகையைப் பற்றி என்ன ஸார்! என் வீட்டுக்கு வருபவர்கள் வேறு வீட்டுக்குக் குடி போகக் கூடாது என்று அபிப்பிராயம் உடையவன் நான். வீடு மாற்றுவதில் உங்களுக்குள்ள கஷ்டம்; காலியாக இருப்பதில் எனக்குள்ள நஷ்டம் இவைகளை நான் சொல்லத் தேவை இல்லை. உசிதமென்று உங்களுக்குத் தோன்றின வாடகையைக் கொடுங்கள். வீடு - புது வீடு. நீங்கள்தான் முதல் முதலாக வருகிறீர்கள்."

"சரி, வாடகை எவ்வளவு சொல்லுங்கள்" என்றேன்.

"பதின்மூன்று ரூபாய் கொடுங்கள். அதிகம் என்று தோன்றினால் ஒன்றிரண்டு குறைத்துக் கொள்ளுங்கள்."

* * *

"ஆ!" என்று சொல்லிக்கொண்டே கண்களை அகல விரித்தேன். மேஜை மீது காப்பி வைத்திருந்தது.

"ரொம்ப நாழி தூங்கிவிட்டாயே! காப்பி ஆறிப்போகிறது. முதலில் அதைக் குடி" என்றான் என் நண்பன்.

நான் காப்பியைக் குடித்தேன்.

"நீ களைப்பு மிகுதியால் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாய். உன்னை எழுப்ப மனமில்லாமல் நானே பக்தபுரி அக்ரகாரம் சென்று அந்த வீட்டை விசாரித்தேன். முந்தாநாள் யாரோ, ராயர் காலேஜ் வாத்தியாராம், குடி வந்து விட்டாராம். வாடகை ரூபாய் 35 என்று சொன்னார்கள். எனக்குத் தெரிந்தவரையில் வேறு ஒன்றும் காலியில்லை. விசாரித்துச் சொல்லுகிறேன்" என்றான் என் நண்பன் நாராயணன்.

"சரி" என்று சொல்லிக் கொண்டே நானும் கிளம்பினேன் என்னுடைய பழைய வீட்டுக்கு.

வாடகைக்கு வீடு இருந்தால் சொல்லுங்கள். தாராசுரம், ஸ்வாமிமலையாக இருந்தாலும் பாதகமில்லை!



# மெல்லியர் எழிலுக்கு இரு அழகுக் கிரீம்கள் இன்றியமையாதவை




உங்கள் வதனத்திற்கு இசசிறந்த
பராமரிப்பளியுங்கள்



எப்பொழுதும் எழிலோங்க உங்கள் முகத்திற்கு இருவகை க்ரீம்களின் நித்திய பராமரிப்பு அவசியம்—முதலாவது, கோர்த்தியாகக் கலவை செய்த தைலங்களடங்கிய பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம், முகத்தை சுத்தம் செய்து மழமழப்பாக்க. இரண்டாவது, மெல்லிய, மெழுக்கற்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம், வெய்யில், வியர்வையினின்று பகல் முழுதும் முகத்தைப் பாதுகாக்க.

பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமால் முகத்தை சுத்தம் செய்யுங்கள். ஊடுருவி உட்செல்லும் தைலங்களுள்ள இந்த க்ரீமை தினம் இரவு முகத்தில் தடவி, விரல் நுனிகளால் சருமத்தினுள் மெதுவாக தேய்த்திறக்குங்கள். துடைத்துக் கழுவவும். இப்பொழுது பாருங்கள், முகம் எவ்வளவு ஸ்வச்சமாக, புதுமலர் காந்தியுடன் விளக்குகிறது—வியர்வை மினுமினுப்பேயின்றி, ஆம் என்னே மழமழப்பாக!

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமால் தினம் காலையில் முகத்தைப் பாதுகாருங்கள். குளுமையான, மெல்லிய, மெழுக்கற்ற இந்த க்ரீமை லேசாகத் தடவுங்கள். அது கண்ணுக்கு புலப்படாது. வெப்பம், அழுக்கு முதலியவற்றினின்று பகல் முழுதும் முகத்தைக் காப்பாற்றி அன்றலர்ந்த மலரென சோபிக்கச் செய்கிறது.





# பாண்ட்ஸ்



வியாபார விவரங்களுக்கு:
எல். டி. ஸெய்மூர் & கோ., (இந்தியா) லிட்.
பம்பாய் - கல்கத்தா - காரச்சி - சென்னை.




## ஐம்பத்திரண்டாம் அத்தியாயம்

## புது வாழ்க்கை

சித்திரை மாதம். மனதைக் கவரும் மாலை நேரம். அஸ்தமன சூரியன் ஆகாயத்துக்குப் பொன்னிறம் பூசிக் கொண்டிருந்தான். கங்கைக் கரையில் உள்ள கொன்றை மரங்களும் பலாச மரங்களும் பூத்துக் குலுங்கின. விழுது இறங்கியிருந்த விசாலமான ஆலமரம் ஒன்று பக்கத்தில் இருந்தது. அதனடியில் பசுக்களும் எருமைகளும் கட்டப்பட்டிருந்தன. குடிசைகளின் கூரை மீது படர்ந்திருந்த சுரைக் கொடிகள் கண்ணுக்குக் குளிர்ச்சியாகக் காட்சி அளித்தன. வெகு தூரம் வரை ஒரு குப்பை கூளத்தைக் கூடக் காணோம். எங்கும் ஒரே நிசப்தம் நிலவியிருந்தது. நிம்மதியாகவும் அமைதியாகவும் வாழ்வதற்கு அதைவிடத் தகுதியான வேறு நல்ல இடம் எங்கே யிருக்க முடியும்? பக்கத்திலே, பொன் மேனி படைத்த கங்கை சிவப்பு, கருப்பு, நீலம் மூன்று வர்ணங்களும் தோய்ந்த மேலாடை உடுத்திக் கொண்டு, வெகு ஒய்யாரமாகக் 'கல கல' வென்ற இன்னிசையுடன் களித்து போய்க் கொண்டிருந்தது. அது சில இடங்களில் மானைப் போலத் துள்ளிக் குதித்துக் கொண்டும், சில இடங்களில் புது மாட்டுப் பெண்ணைப் போல நாணிக் கோணிக் கொண்டும், சில இடங்களில் சிறு குழந்தையைப் போலத் திரு திருப்புடனும், சில இடங்களில் கம்பீரமாகவும் எல்லையற்ற அந்தகாரத்தை நோக்கி சலிப்பின்றிப் போய்க்கொண்டிருந்தது. மனோ ரம்யமான குழந்தைப் பருவம், வேடிக்கையிலும் விநோதத்திலும் லயித்து, பிறகு கவலையும் போராட்டம் நிரம்பியதும் இருள் சூழ்ந்ததுமான எதிர் காலத்தை நோக்கிப் போகிறது அல்லவா? கங்கை முன்னேறிச் சென்றதும் அதைப் போலத்தான் இருந்தது. தேவீதீனும் ரமாநாத்தும் பிரயாகைக் கருகில் உள்ள இந்த இடத்தைத் தான் தங்கள் வாசத்துக்குத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். சுகமான இடம்.

மூன்று வருஷங்களுக்கு மேல் ஓடி விட்டன. தேவீதீன் தோட்டம்-தரவு, ஆடு-மாடு முதலியவைகளை வாங்கிச் சேர்த்துக் கொண்டு விவசாயத்தில் ஈடுபட்டான். அவனுக்கு அந்த வாழ்வில் அமைதியும், திருப்தியும் கிட்டின. அவனுடைய முகத்தில் முன்பிருந்த அந்த வெறுப்பு, சுருக்கங்கள் இல்லை; ஒரு புத்துணர்ச்சியும், புதிய காந்தியும் ஒளி வீசிக் கொண்டிருந்தது.

பொழுது சாய்ந்து விட்டது. மேயப் போயிருந்த மாடுகள் வீடு திரும்பின. கிழவி அவற்றைத் தொழுவத்தில் கட்டித் தீனி வைத்தாள். சிறிது நேரத்துக் கெல்லாம் தேவீதீனும் கோபிநாத்தும் பார வண்டியொன்றில் நெற் கதிர்களை ஏற்றிக்கொண்டு வந்து சேர்ந்தனர். அதற்கு முன்னாலேயே தயாநாத பாபு ஆலமரத்தடியில் ஒரு இடத்

தைச் சுத்தம் செய்து வைத்திருந்தார். அங்கே அவை இறக்கப்பட்டன. அந்த மாத்தடியிலேயே தான் நெற் களஞ்சியமும் இருந்தது. தயாநாத பாபு வேலையிலிருந்து 'ரிட்டையா'கி விட்டார்; தேவீநினுக்கு உதவியாக வயல் வேலைகளைக் கவனிக்கலானார். அவரைப் பத்திரிகைப் பைத்தியம் விட்டபாடில்லை. ஆகவே எத்தனையோ பத்திரிகைகளை அவர் வரவழைத்துக் கொண்டிருந்தார். ஓழிந்த வேளைகளில் எல்லாரையும் கூட்டி வைத்துக் கொண்டு அவர்களுக்கும் பத்திரிகை படித்துக் காட்டுவது அவருடைய முக்கியமான அலுவல்களில் ஒன்று.

ரமாநாத்துக்கோ கிராம வாழ்க்கை ரொம்ப ரொம்பப் பிடித்து விட்டது. எத்தனை பெரிய வேலை கிடைத்தாலும் அவன் லட்சியம் செய்யமாட்டான். அப்படி அவனுடைய மனோ நிலை மாறிவிட்டது. நாட்டுப் புறத்தை விட்டு நகரத்துக்குப் போக அவன் மனம் சிறிதும் விரும்பவில்லை. காந்தி மகாத்மா கூறிய குடிசைத் தொழில்களில் அவன் அதிகக் கவனம் செலுத்தத் தொடங்கினான்.

தேவீநின் நெற்கதிர்களை இறக்கிவிட்டு வண்டி மாடுகளை அவிழ்த்துத் தொழுவத்தில் கட்டினான். பிறகு தயாநாத பாபுவிடம் வந்து, "இன்னும் தம்பி திரும்பவில்லையா?" என்று கேட்டான்.

தயாநாத பாபு கீழே சிந்தியிருந்த நெற்கதிர்களைப் பொறுக்கிக் கொண்டே, "இன்னும் திரும்பக் காணோமே! இனிமேல் அவனாவது, பிழைக்கவாவது? எனக்கு நம்பிக்கை யில்லை. காலத்தின் கோலத்தை என்ன வென்று சொல்லுவது? வண்டி என்ன, மோட்டார் என்ன, பங்களா என்ன, சொன்ன சொல் கேட்பதற்கு வேலைக்காரர்கள் என்ன - இப்படி ஆனந்தமாக வாழ்ந்து கொண்டிருந்தவனுக்கு இந்தக் கதியா வரவேண்டும்? வக்கீல் அவனுக்காக என்ன சேர்த்து வைத்திருந்தும் என்ன பிரயோஜனம்? எல்லாவற்றையும் அண்ணன் பிள்ளைகளும் தம்பி பிள்ளைகளும் அல்லவா அடித்துப் பிடுங்கிக் கொண்டு போய் விட்டார்கள்!" என்றார்.

"வழக்குத் தொடர்ந்தால் எல்லாம் கிடைத்துவிடும் என்று தம்பி சொன்னான். ஆனால் அவன் அதை விரும்பவில்லை. அம் மாதிரித் தங்கமான பெண்ணை நான் பார்த்ததே யில்லை" என்றான் தேவீநின்.

அதே சமயம் ஜாகேசுவரி குடிசையிலிருந்து இடுப்பில் ஒரு சின்னஞ் சிறு குழந்தையைத் தூக்கிக் கொண்டு வெளியே வந்து, குழந்தையைத் தயாநாத பாபுவின் மடியில் விட்டு விட்டு, தேவீநினைப் பார்த்து, "சற்று உள்ளே வந்து ரத்தினைப் பாரேன். கொஞ்ச நேரமாக என்னவோ போலிருக்கிறாள். ஜொஹராவும் பத்மாவும் விம்மி விம்மி அழுது கொண்டிருக்கிறார்கள். ரமாநாத் இன்னும் திரும்பிவரக்காணோம்!" என்று வெகு கவலையுடன் சொன்னாள்.

அதைக் கேட்டதும் தேவீநின் ரத்தனுடைய அறைக்கு விரைந்து சென்றான். அவள் ஒரு மூலையில் கட்டிலில் படுத்திருந்தாள். தேகம் வற்றிக் குச்சியாகப் போயிருந்தது. எப்பொழுதும் செந்தாமரை போல மலர்ந்திருக்கும் அவளுடைய வதனம் வாடி வதங்கி வெளுத்துப் போயிருந்தது. காதுக் இனிமையானதும் புத்துயிர் ஊட்டக் கூடியதுமான சங்கீதம் காற்றில் கலந்து வரும்பொழுது அதன் மெல்லிய எதிரொலி மட்டும்தானே நம்முடைய காதுகளில் ரீங்காரம் செய்கிறது! அதைப் போன்ற நிலைமையை ரத்தன் அடைந்து விட்டாளோ என்று தோன்றிற்று. ஜொஹரா எதையோ பறி கொடுத்து விட்டவள் போலப் பேந்தப் பேந்த விழித்துக் கொண்டு, ஏக்கமே உருவெடுத்தவளாய் ரத்தனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள்

## சங்கீதம்

"பொதுக் கூட்டங்களில் அமைதியை நிலை நாட்டுவதற்குச் சங்கீதத்தைப் பயன்படுத்தலாம். நாம் சங்கீதத்தை அலட்சியம் செய்து விட்டோம். இந்தியாவில் சங்கீதம் ஒரு சிலருடைய உடைமையாக மாத்திரமே இருந்து வருகிறது. அது தேச மக்களுடைய உடைமையாக மாற வேண்டும். பலர் கூட்டமாகச் சேர்ந்து தேசிய கீதங்களைப் பொருத்தமாகப் பாடும் வழக்கம் பரவ வேண்டும். அதற்காக ஒவ்வொரு வருஷத்திலும் காங்கிரஸ் மகாசபை நடக்கும்போதும் வேறு பல மகா நாடுகள் நடக்கும் போதும் பெரிய சங்கீத வித்வான்கள் அங்கு வந்து பொதுஜன சங்கீதப் பயிற்சி அளிப்பதை நான் பெரிதும் விரும்புவேன்."

காந்தி மகான் திருவாக்கு—14




லேடி டாக்டர்:—என்ன ஐயா, இது? விளையாட்டுச் சாமான் சகிதமாய் வந்திருக்கிறீர்!

காத்திருப்பவர்:—குழந்தை பிறந்தவுடன் சொல்லுங்கள்; குழந்தைக்கு விளையாட்டுக் காட்டத்தான் இதெல்லாம் கொண்டு வந்திருக்கிறேன்.

---

இந்த ஒரு வருஷ காலமும் இரவை இரவு என்று எண்ணாமல் பகலைப் பகல் என்று பாராமல் ரத்னனுக்கு ஊழியம் செய்வதிலேயே தன் பொழுது முழுவதையும் செலவிட்டு வந்தாள். எந்த அனுதாபத்தை அவள் பத்மாவிடம்கூடப் பெற முடியவில்லையோ, அந்த அனுதாபத்தை அவள் ரத்னனிடம் பெற்றாள். துக்கமும் துயரமும் இருவரையும் பிணைத்து ஒன்று சேர்த்தன. இருவருடைய ஆத்மாக்களும் இரண்டறக் கலந்தன. இம்மாதிரியான நெருங்கிய நட்பு அவளுக்கு ஒரு புதிய அனுபவமே. இந்த அன்பு தனக்குக் கிட்டக் கூடும் என்று அவள் ஒருபோதும் மனதால் கூட நினைத்ததில்லை.

தேவிதீன் கவலையுடன் ரத்னனுடைய முகத்தைப் பார்த்தான். பிறகு அவளுடைய நாடியைப் பிடித்துப் பார்த்துக் கொண்டே, "எவ்வளவு நாழிகையாக இப்படிப் பேசாமல் இருக்கிறாள்?" என்று பத்மாவைக் கேட்டான்.

பத்மா கண்களைத் துடைத்துக் கொண்டு "இவ்வளவு நேரம் வரை பேசிக்கொண்டு தான் இருந்தாள். திடீரென்று கண்களை எங்கேயோ கொண்டுபோய்ச் செருகி விட்டது. மூர்ச்சை அடைந்துவிட்டாள். அவரை இன்னும் வைத்தியரை அழைத்துக்கொண்டு வரக்காணேனும்!" என்றாள்.

"வைத்தியரிடம் இதற்கு இனிமேல் மருந்து ஏது?" என்று சொல்லிக் கொண்டே தேவிதீன், மடியிலிருந்து விபூதியை எடுத்து ரத்னனின் தலையில் தடவினான். பிறகு இன்னும் கொஞ்சம் விபூதியைக் கையில் எடுத்துக் கொண்டு ஏதோ மனதுக்குள் முணுமுணுத்துவிட்டு, ரத்னனுடைய நெற்றியில் இட்டான். பிறகு "அம்மா, ரத்னன்! கண்ணைத் திற" என்று அன்புடன் கூப்பிட்டான்.

ரத்னன் தன் கண்களைத் திறந்தாள் பிறகு பிரமை பிடித்தவள்போலச் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே, "என் மோட்டார் வந்திருக்கிறதா? டிரைவர் எங்கே போய்த் தொலைந்துவிட்டான்? ஜும்பு, உடனே போய் அவனைக் காரை எடுத்து வரச்சொல்லு. ஜோஹிரா, நீ எங்கள் வீட்டுத் தோட்டத்தைப் பார்க்கவில்லையே! வா, காட்டுகிறேன். சிறிது நேரம் நாம் இருவரும் ஊஞ்சல் ஆடுவோமா?" என்றாள்.

ஜோஹிரா அழ ஆரம்பித்துவிட்டாள். பத்மாவினாலும் கண்ணீரின் வேகத்தை அடக்க முடியவில்லை. ரத்னன் ஒரு கண நேரம் மேற்கூரையையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். சிறிது நேரத்துக்கெல்லாம் அவளுக்குச் சுயப் பிரக்ஞை வந்தது. அவள் வெட்கிப்போய் அசட்டுச் சிரிப்புச் சிரித்தவாறே, "ஒன்றுமில்லை. ஏதோ சொப்பனம் கண்டேன்" என்றாள்.

செவ்வானத்தின்மீது கருப்புத் திரை விழுவதற்கும், ரத்னனின் வாழ்க்கைமீது மரணதேவதை தனது போர்வையைப் போர்த்துவதற்கும் சரியாக இருந்தது.

ரமாநாத் வைத்தியரை அழைத்துக் கொண்டு திரும்பும் பொழுது நன்றாக இருட்டிவிட்டது. குடிசையில் மரண அமைதி குடி கொண்டிருந்தது.

ரத்னனின் மரணத்தினால் ஏற்பட்ட அந்தச் சோகம் அழுது ஆறிவிடக்கூடியதல்ல; எறும்புருக்கி நோய்போல உள்ளத்தை உருக்கிப் பிழியக் கூடியது. அந்தச் சோகம் எத்தனை நாட்களானாலும் மனதை விட்டு அகலாது; அதன் சுமை குறையாது.

ரத்னன் இறந்தபின் ஜோஹிரா தன்னைத் தனியளாகி விட்டாள். அவர்கள் இருவரும் ஒரு கணம்கூடப் பிரிந்து வாழ்ந்ததில்லை. ஆகையால் எந்த வேலையையும் தனிமையில் செய்ய ஜோஹிராவுக்கு மனம் ஓடுவதேயில்லை. அவள் சில சமயம் நதிக்கரைக்குச்

சென்று ரத்தனைப் பற்றி நினைத்து உருகுவான். சில சமயம் ரத்தனும் தானும் சேர்ந்து வளர்த்த ஒரு ஒட்டுமாங் கன்றுக்கு அடியில் உட்கார்ந்து கண்ணீர் வடிப்பான். எப்பொழுது பார்த்தாலும் எதையோ பறி கொடுத்து விட்டவன் போல ஏக்கத்துடன் காட்சி யளிப்பான். பத்மாவுக்குத் தன் குழந்தையைக் கவனித்துக் கொள்வதற்கும் வீட்டு வேலைகளைப் பார்ப்பதற்கும் தான் பொழுது சரியாயிருக்கும். அப்படிப் பேச உட்கார்ந்தாலும் ரத்தனைப் பற்றித்தான் பேசுவார்கள்; அவனை நினைத்துக் கண்ணீர் வடிப்பார்கள்.

புரட்டாசி மாதம் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடிற்று. கங்கை நதி கிராமங்களையும் சேரிகளையும் கபளீகரம் செய்து கொண்டிருந்தது. எத்தனையோ கிராமங்கள் தெப்பமாக மிதந்தன. ஜோஹிரா வெள்ளத்தின் வேடிக்கையைப் பார்ப்பதற்காக ஆற்றங்கரைக்குச் சென்றாள். அவளுடன் பத்மாவும் ரமாகாந்தும் கூடச் சென்றிருந்தார்கள். அலைகள் வெறியாட்டம் ஆடிக் கர்ஜித்தன; நுரை நுரையாகக் கக்கின; ஆங்காரத்துடன் ஆள் உயரம் எழும்பிக் குதித்தன. பெரிய பயில்வானைப் போலப் பாய்ச்சல் காட்டின. அவை சில சமயம் ஒரு அடி முன்னேறின; சில சமயம் இரண்டடி பின் நகர்ந்தன. அடுத்த கணம் ஒரேயடியாகச் சுழித்துக் கொண்டு கன வேகமாக முன்னேறின. எங்கிருந்தோ ஒரு குடிசை, குடி வெறியில் மூழ்கினவனைப் போல ஆடி அசைந்து கொண்டு தண்ணீர் போகும் போக்கில் மிதந்து சென்றது. இன்னொரு இடத்தில் கொப்பும் கிளையுமாகக் கீழே சாய்ந்த மரம், மூழ்கிக் கொண்டும் எழுந்து கொண்டும் பிரவாகத்துடன் பிரவாகமாக உருண்டோடிக் கொண்டிருந்தது. ஆடு மாடு, மரம் மட்டை முதலியவைகளை ஆற்று நீர் கண் மூடிக் கண் திறக்கும் கோத்துக்குள் வெகு தூரத்துக்கு வெகு தூரம் அடித்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தது.

இதே சமயம்தான் எதிர்பாராத விதமாக ஒரு படகு நட்டாற்றில் தென் பட்டது. அதில் அநேக ஆண் பெண்கள் அமர்ந்திருந்தனர். 'அமர்ந்திருந்தனர்' என்று சொல்வதை விட, பயத்தினால் ஒருவருடன் ஒருவர் ஒட்டிக் கொண்டிருந்தார்கள் என்று சொல்வதுதான் பொருத்தமாகும். படகோ மேலே எழும்புவதும் கீழே அமுங்குவதுமாக இருந்தது. 'எப்பொழுது மூழ்குமோ?'



என்று எல்லோருக்கும் ஒரே நினைவாக இருந்தது. இருந்தாலும் அவர்களுக்குத் தான் என்ன துணிச்சல்! ஆண்கள் 'கங்கை மாதாவுக்கு ஜே!' என்று ஜய கோஷம் போட்டுக் கொண்டிருந்தனர். பெண்மணிகள் கங்கையின் பெருமையைக் கூறும் ஓடப் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தனர். வாழ்வுக்கும் சாவுக்கும் மத்தியில் நடக்கும் இம்மாதிரியான போராட்டத்தை யார் பார்த்திருக்கப் போகிறார்கள்? கரையின் இரு புறத்திலும் நின்று கொண்டிருந்த ஜனங்கள் திகிலுடன் வைத்த கண் வாங்காமல் படகைப் பார்த்தபடியே நின்று கொண்டிருந்தனர். ஒவ்வொரு தடவையும் படகு புரண்டு கொடுக்கும் பொழுதெல்லாம் மக்கள் மனம் பதறித் தவித்தனர். கரையிலிருந்தவர்கள் கயிறு விட்டெறிந்து பார்த்தனர். அவர்களுடைய பிரயாசைதான் வீணாயிற்று. படகில் இருந்தவர்கள் கைக்குக் கயிறு கிட்டவில்லை. எதிர் பார்த்தவாறே படகு திடீரென்று கவிழ்ந்து விட்டது!

படகில் இருந்தவர்கள் அனைவரும் அலைகளுக்கு இலக்காகினர். சில விநாடிவரை அநேக ஆண் பெண்கள் மூழ்கி எழுவது மட்டும் தென்பட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் அதுவும் மறைந்து விட்டது. ஒரே ஒரு பிரகாசமான வஸ்து மட்டும் கரைப் பக்கம் வந்து கொண்டிருந்தது. வேகமாக வந்த ஒரு அலை அதைக் கரைக்கு வெகு சமீபம் கொண்டு வந்து தள்ளிற்று. கரைக்கும் அதற்கும் கிட்டத்தட்ட இருபது கஜ தூரம் இருக்கும். ஊன்றிக் கவனித்துப் பார்த்ததில் அது ஒரு பெண்ணின் உருவம் என்பது தெரிய வந்தது. ஜோஹிரா, பத்மா, ரமாகாந்த் மூவரும் கரையில் நின்று கொண்டு கண் கொட்டாமல் அதையே பார்த்துக் கொண்டிருந்தனர். அந்தப் பெண்ணின் கையில் ஒரு குழந்தையும் இருந்தது. அவ்விரு ஜீவன்களையும் கரையேற்றுவதற்கு மூவரும் துடியாய்த் துடித்தனர். ஆனால் அந்த இருபது கஜ தூரமும் நீந்திப் போவது என்பது அவ்வளவு எளிதல்ல. ரமாகாந்துக்கு ஏதோ கைகளையும் கால்களையும் உதைத்துக் கொள்ளத் தெரியுமே தவிர, ரொம்ப நன்றாக நீந்தத் தெரியாது. அலைகளின் வேகம் தாளாமல் கால்கள் ஆட்டம் கொடுத்து விட்டால், அப்புறம் அவனுடைய பிணத்தை வங்காள விரிகுடாவில் தானே பார்க்கலாம்!

ஜோஹிரா, "நான் போய் அந்தப் பெண்ணைக் காப்பாற்றுகிறேன்" என்றாள்.

ரமாகாந்த் வெட்கிப் போய், "நன்றாயிருக்கிறது. நீ போகவாவது? நான் போகிறேன். ஆனால் அவ்வளவு தூரம் போக முடியுமா, முடியாதா என்றுதான் சந்தேகமாயிருக்கிறது. அங்கே இழுப்பு அதிகம்" என்றான்.

ஜோஹிரா தண்ணீரில் ஒரு காலை வைத்துக்கொண்டே, "வேண்டாம், நீங்கள் இங்கேயே இருங்கள்" என்றாள்.

அடுத்த கணம் அவள் இடுப்பு அளவு நீரில் இறங்கி விட்டாள். ரமாகாந்த் கவலையுடன், "எதற்காக வீணாக உயிரைவிடப் போகிறாய்? அந்தப் பக்கம் ஒரு குழி இருக்கிறது. நீ போக வேண்டாம். இதோ நான் போகிறேன்" என்றான்.

ஜோஹிரா கைச் சாடையினால் அவனைத் தடுத்துக் கொண்டே, "வேண்டாம், வேண்டாம். என் சொல்லைக் கேளுங்கள். நீங்கள் தண்ணீரில் இறங்காதீர்கள். நான் இதோ போய் ஒரு நொடியில் அந்தப் பெண்ணை எடுத்துக்கொண்டு வந்துவிடுகிறேன்" என்றாள்.

ஜோஹிரா அந்தப் பெண் அருகில் போயிருப்பாள். அதற்குள் ஒரு பெரிய அலை வந்து அந்தப் பெண்ணை கட்டாற்றில் வெகு தூரம் இழுத்துக்கொண்டு போய்விட்டது. அதனால் அந்தப் பெண்ணைப் பிடிக்க முடியவில்லை. ஜோஹிராவும் அலையை எதிர்த்துப் போராட முடியாமல் பிரவாகத்தின் போக்



சென்ற 14ம் தேதி ஞாயிற்றுக் கிழமையன்று மாலை சென்னை அகில இந்திய ரேடியோவில் ஸ்ரீமதிகள் ராதாவும் ஜயலக்ஷ்மியும் பாடினார்கள்.

யில் சென்றுவிட்டாள். வெகு தூரம் போன பின்தான் அவளால் தன்னைச் சமாளித்துக் கொள்ள முடிந்தது. ஆனால் அவள் சமாளித்துக் கொள்ளுவதற்குள்ளேயே இன்னுமொரு அலை அவளைத் தள்ளிவிட்டது.

ரமாநாத் பதைபதைத்துப் போய்த் தண்ணீரில் திடுமென்று குதித்துவிட்டான். "ஜோஹிரா! ஜோஹிரா! இதோ நான் வந்து விட்டேன்!" என்று உரக்கக் கத்தினான்.

ஆனால் ஜோஹிராவுக்கு அலைகளுடன் போராடச் சக்தியிருந்தால்தானே! அவளும் அந்தப் பிணத்தோடு பிணமாக மிதக்கலானாள். அவளுடைய கைகால்கள் அசைவதுகூட நின்றுவிட்டது. திடீரென்று இன்னுமொரு அலை எழும்பி அவ்விருவரையும் தண்ணீருக்கடியில் கொண்டுபோய் விட்டது. ஒரு நிமிஷத்துக்குப் பிறகு ஜோஹிராவின் கரும் கூந்தல்மட்டும் நீரின் மேல்பரப்பில் தெரிந்தது. அதுவும் ஒரே ஒரு நிமிஷம் தான்! அதற்குப் பிறகு மறைந்துவிட்டது.

ரமாநாத் கைகால்களை அடித்துக் கொண்டு எப்படியோ நூறுகஜ தூரம் வரை முன்னேறிவிட்டான். ஆனால் அதற்குள் அவனுடைய கைகால்கள் சளைத்துவிட்டன. மூச்சு வேறு திணற ஆரம்பித்துவிட்டது. ஜோஹிராவும் கண்களுக்குத் தட்டுப்படவில்லை. அப்படியிருக்கும்பொழுது அவன் அதற்குமேல் எங்கே போவது? கடைசியில் கண்ட காட்சி அவனுடைய கண்களுக்கெதிரிலேயே நின்றது.

கரையில் நின்று கதறிக் கொண்டிருந்த பத்மாவும் தண்ணீரில் இறங்கிவிட்டாள். அதைக் கண்டதும் ரமாநாத் முன் செல்ல முடியவில்லை. அவனை ஒரு சக்தி முன்னுக்கிழுத்தது. இன்னொன்று பின்னுக்கிழுத்தது. இரு சக்திகளுக்கு மிடையே ஒரு பெரும் போராட்டம் மூண்டது. கடைசியில் பின்னுக்கிழுத்த சக்தி தான் வெற்றி பெற்றது. அதனிடம்தானே அவனுடைய பாசமும் பற்றுதலும் குடிகொண்டிருந்தன. பாசம் பின்னுக்கிழுக்கவே அவன் கரை திரும்பும்படி ஆகிவிட்டது.

வெகு நேரம் வரை ரமாநாத்தும் பத்மாவும் முழங்கால் அளவு நீரில் நின்றுகொண்டு நதியையே இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். இருவரும் ஒருவருக்கொருவர் வெகு நேரம்வரை பேசிக்கொள்ளாமலே மௌனமாக இருந்தார்கள்.

கடைசியில் ரமாநாத் தான் மௌனத்தைக் கலைத்தான். "பத்மா, தண்ணீரில் ஏன் நிற்கிறாய்? உடம்புக்கு ஆகாது, கரையேறு" என்றான்.

பத்மா தண்ணீரிலிருந்து கரையேறி நின்றாள். ஆனால் அவள் வாய் திறந்து ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. மரணத்தின் அதிர்ச்சி அவளை அப்படியே கதிகலங்கச் செய்துவிட்டது. 'வாழ்க்கை அநித்தியமானது; நிலையற்றது' என்பதை அறிவுறுத்தும் சம்பவம் அவளுடைய கண்களுக்கெதிரிலேயே இரண்டாவது முறையாக நடந்தது. 'ரத்தன் செத்துப்போய் விடுவான், அவளுடைய வாழ்வெல்லாம் இன்னும் கொஞ்ச காலத்துக்குத்தான்!' என்பதற்கு அறிகுறி முன்னாலேயே தெரிந்து விட்டது. ஆனால் ஜோஹிராவின் சாவோ பேரிடிக்குச் சமானமாக அல்லவா ஏற்பட்டு விட்டது! அரைமணி நேரத்துக்கு முன்பு மலர்ந்த முகத்துடன் மூவரும் வெள்ளத்தின் வேடிக்கையைப் பார்ப்பதற்காக வீட்டை விட்டுப் புறப்பட்டு வந்தார்களே, அப்பொழுது அவர்களில் யாருக்காவது மரண தேவதை இப்படியெல்லாம் திருவிளையாடல் புரிவாள் என்ற விஷயம் தெரியுமா?

சிறிது நேரம் கழித்து ரமாநாத் பத்மாவை அழைத்துக் கொண்டு துயரமே உருவெடுத்தவனாய் வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

ஆனால் அவனும் பத்மாவும் அடிக்கடி ஆற்றங்கரைக்கு வந்து மணிக் கணக்காக ஜோஹிரா மூழ்கின இடத்தையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பது உண்டு. 'ஜோஹிரா பிழைத்திருக்கலாம். என்றைக்காவது ஒருநாள் அவள் வந்து விடக்கூடும்' என்ற நம்பிக்கை வெகு காலம் வரை அவர்களுக்கு இருந்தது. ஆனால் கொஞ்சம் கொஞ்சமாக அந்த நம்பிக்கை மறைந்து விட்டது. ஆனால் ஜோஹிராவின் நினைவு முகம் மட்டும் அவர்களுடைய கண்களிலிருந்து மறையவே யில்லை. அவள் வளர்த்த செடிகள், அவள் வளர்த்த பூனை, அவள் தைத்த துணி, அவளுடைய அறை முதலியவைகள் அவள் வைத்துப் போன ஞாபகச் சின்னங்களாகத் திகழ்ந்தன. அவற்றின் அருகில் சென்றால் ஜோஹிரா அந்த அறையிலே மலர்ந்த முகத்துடன் காட்சி அளிப்பது போல ரமாநாத்துக்கும் பத்மாவுக்கும் தோன்றும். (முற்றிற்று)



டி.கே.சி

# கம்பர் தரும் காட்சி

• • •

## 205. இனம் தெரியாது வந்தான் எமன்!

சுக்ரீவனையும் சுற்றத்தாரையும் ராமனிடம் அடைக்கலமாக ஒப்படைத்தான் வாலி,—கைகளைச் சிரமேல் வைத்தவனாக.

பிறகு தன் அன்புள்ள தம்பி சுக்ரீவனைப் பார்த்து "உன்னுடைய அருமை மகனை உடனே இங்கே அழைத்து வா!" என்று சொன்னான்.

வைத்தபின் உரிமைத்தம் பி
 மாமுகம் நோக்கி 'வல் லே
உய்த்தனை கொணர்தி உன் றன்
 ஓங்கரும் மகனை' என் னா;
அத்தலை அவனை ஏ வி
 அழைத்தலின் அணைந்தான் அன்
 றே,
கைத்தலத்(து) உவரிநீ ரைக்
 கலக்கினான் பயந்தகா ளை!

[வைத்த பின்: கையைத் தலையில் கூப்பிச் சேவித்த பின்பு; உரிமைத் தம்பி மாமுகம் நோக்கி: அன்பிற்குரிய தம்பி சுக்ரீவன் முகத்தை நோக்கி; வல்லே உய்த்தனை கொணர்தி: உடனே இங்கு கொண்டு வருவாயாக; உன்றன் ஓங்கரும் மகனை என்னா: உன்னுடைய பெறுதற்கரிய மகனை என்று சொல்லவும்; அத்தலை அவனை ஏவி அழைத்தலின்: அந்த இடத்துக்கு அவனை ஆள்விட்டுக் கூப்பிடவும்; அணைந்தான் அன்றே: வந்து சேர்ந்தான்; யார்? கைத்தலத்து உவரி நீரைக் கலக்கினான் பயந்த காளை: தன் இரு கைகளாலேயே சமுத்திரத்து நீரைக் கடைந்தவனான வாலி பெற்ற பிள்ளையான அங்கதன்.

குறிப்பு:— வாலிக்கு சுக்ரீவனிடத்தில் பூர்வமாக உள்ள அன்பும் பரிவும் உண்டாய் விட்டது. 'உரிமைத் தம்பி' என்பது சுக்ரீவனைக் குறிக்கிறது. 'உன்றன் ஓங்கரும் மகனை' என்று சொல்லும்போது சுக்ரீவனுக்கு மகன் இருந்ததாக எண்ணலாம். அப்படி ஒன்றும் கிடையாது. அங்கதனையே தன் மகனாக எண்ணி அன்பு பாராட்டி வந்தான் சுக்ரீவன். அந்த அருமைப் பாட்டை எல்லாம் குறித்தே 'உன் மகன்' என்று சொல்லுகிறான் வாலி. வாலி, சுக்ரீவன், அங்கதன் இவர்களுக்கிடையே இருந்த குடும்ப உறவு, அருமையாக வெளியாகிறது கவியில்.]

* * *

அங்கதன் சிவந்த மேனியன். சிறு பையன். கஷ்டமே அனுபவியாதவன். ஒருவர் கஷ்டப்பட்டார் என்று சொன்னால் உணர முடியாதவன். அவ்வளவு செல்வமாக வளர்ந்தவன். தந்தையைச் சுகமான வாழ்க்கையில் பார்த்தவன். அழகான புஷ்பம் தூவிய சப்ர மஞ்சத்தில் படுக்க அவன் பார்த்திருக்கிறான். இப்போது எப்படிப் பார்க்கிறான்!

சுடருடைப் பரிதி என் னத்
 தோன்றினான்; தோன்றி,யாண் டும்
இடருடை உள்ளத்தோ ரை
 யெண்ணினும் உணர்ந்திலா தான்;
மடலுடை நறுமென்சேக் கை
 மலரின்றி, உதிரவா ரிக்
கடலிடைக் கிடந்தகா தல்
 தாதையைக் கண்ணிற்கண் டான்.

[சுடருடைப் பரிதி என்னத் தோன்றினான்: பிரகாச முள்ள சூரியனைப் போல் தோன்றினான்; மடலுடை நறுமென் சேக்கை

மலர்ந்தி : இதழ்களைப் பரப்பிய வாசனையுள்ள மிருதுவான படுக்கையாகிய மலர்க் அல்லாமல்; உதிர வாரிக் கடலிடை கிடந்த: இரத்த வெள்ளம் பெருகிய கடலிலே இருந்த: காதல் தாதையைக் கண்ணிக் கண்டான் : அருமைத் தந்தையான வாலியைப் பார்த்தான்.]

* * *

அங்கதன் மலைச் சரிவிலிருந்து ஓடி வருகிறான். கண்களிலிருந்து கலங்கிய வாருக கண்ணீரும் ரத்தமும் பொழிகின்றன. அழகிய குண்டலம் தோளைத் தொட்டு ஆடிக் கொண்டிருக்கிறது. கீழே தலத்தில் வெண்மையான பரந்த மேனியோடு கிடக்கிறான் வாலி. அவன்மேல் வந்து விழுந்தான் அங்கதன்.

கண்டகண் கலுழிநீ ரும்
குருதியும் கால, மா லைக்
குண்டலம் அலம்புகின் ற
குவவுத்தோள் குரிசில்,திங் கள்
மண்தலம் கிடந்ததென் னக்
கிடந்தஅவ் வாலிமீ து,
விண்தலம் தன்னின்நின் றோர்
மின்விழுந் தென்னவீழ்ந் தான்.

[கலுழி நீரும் குருதியும் கால: குழம்பாய்க் கண்ணீரும் இரத்தமும் வடிய; மாலைக் குண்டலம் அலம்புகின்ற: சின்னஞ் சிறு ஆரமாகச் செய்த ரத்ன குண்டலம் தொட்டு அசைந்து ஆடுகின்றன; குவவுத்தோள் குரிசில்: பருத்த தோள் கொண்ட அங்கதன்; திங்கள் மண் தலம் கிடந்த தென்ன: சந்திரனானது பூமி மேல் வந்து கிடப்பது போல; கிடந்த அவ் வாலி மீது: செயலற்றுக் கிடந்த வாலியின் மார்பின் மேல்; விண்தலந் தன்னின் நின்று: வானத்தி லிருந்தே (மலைச் சரிவில் இறங்கியது குறிக்கும்) ஓர் மின் விழுந்தென்ன வீழ்ந்தான்: ஒரு நட்சத்திரம் விழுந்தது என்று சொல்லும்படியாக விழுந்தான் — வெண்மையான சந்திரன் மேல் நட்சத்திரம் விழுந்ததுபோல.]

* * *

வாலியின் மார்பில் வந்து விழுந்த அங்கதன் புலம்புகிறான்.

தந்தையின் அரிய குணமும் பரோபகார சிந்தையும்தான் முதலில் ஞாபகத்துக்கு வருகின்றன. உடனே அவன் வீராதி வீரன் என்னும் விஷயமும் ஞாபகத்துக்கு வந்துவிட்டது.

எந்தையே! எந்தையே! இவ்
எழுதிரை வளாகத்(து)யார்க் கும்
சிந்தையால் செய்கையால் ஓர்
தீவினை செய்திலா தாய்
நொந்தனை! அதுதான்நிற் க—
நின்முகம் நோக்கிஎங் ஙன்
வந்தனன் அஞ்சான்கூற் றம்:
வாலிஎன்(று) அறிந்திலன்
கொல்!

[எழுதிரை வளாகத்து: ஏழு சமுத்திரங்களாலும் சூழப்பட்ட இந்த விரிவான உலகத்தில்; நொந்தனை: கஷ்டத்துக் குள்ளாகி விட்டாய்; அது போகட்டும்; வந்தனன் அஞ்சான் கூற்றம்: அஞ்சாதபடி வந்தானே எமனும்; வாலி என்று அறிந்திலன் கொல்: வாலி என்று தெரிந்திருந்தால் வந்திருக்க மாட்டான். ஏதோ இனம் தெரியாமல்தான் வந்தான்போ லிருக்கிறது!]

ஆற்றாமையின் உண்மையான பாஷை எப்படியெல்லாமோ குதித்தோடி வருகிறது!

# இப்பொழுது வேண்டாம்!



தாயார் :— ஓடி வா சீக்கிரம்! தலையை வாரிப் பின்னி விடுகிறேன். நேரமாச்சு; உனக்கு முடி இறக்கப் போகவேண்டும்.

குழந்தை :— இப்போது வேண்டாம் அம்மா! முடி இறக்கின்று வந்தப்புறம் தலையை வாரிப் பின்னிக்கிறேன்!



இருமல்களுக்கும்
ஜலதோஷத்திற்கும்
உபயோகிக்க மறக்காதீர்கள்
ஸிரோலின்
"ரோச்"
உலகெங்கும் உபயோகிக்கப்படுகிறது

